# முகவுரை

தமிழ்நாட்டின் வடவெல்லையாகிய வடவேங்கடத்துக்கப்பாலுள்ள திருக்காளத்தி தொடங்கித் தென் எல்லையாகிய தென்குமரிப் பக்கமுள்ள திருக்குற்றாலம் வரை நேரிலும் கற்பனையிலும் நான் கண்ட பல காட்சிகளை இக்கட்டுரைத் தொகுதியுள் காணலாம். சில நேரிற் கண்டவை ; சில கேட்டவை ; வேறு சில, பாடல்கள் புலப்படுத்தியவை. கை குலுக்குவதன் பழமையையும் வேட்டையின் சுகத்தையும் குடி வெறியின் வேகத்தையும் இங்கே காணலாம். முடிவிலே இயற்கையோடியைந்த இன்ப வாழ்க்கையிலும் திளைக்கலாம்.

இக்கட்டுரைகள் வசந்தம், பாரதமணி, கல்கி, சக்தி ஆகிய பத்திரிகைகளிலும் குமரி மலரிலும் வெளிவந்தவை. இப்பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கு என் நன்றி உரியது.

மு. அருணாசலம்

## பொருளடக்கம்

## நிழலருமை வெய்யிலிலே

மக்கள் இயல்பை நுணுகிப் பார்ப்பதில் ஒரு மகிழ்ச்சி ஏற்படவே செய்கிறது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னே, சுவாமி தரிசனம் செய்வதற்காக ஒரு சமயம் காளத்திக்குப் போயிருந் தேன். 'காளத்தி காணப்பெற்ற கண்களே கண்கள்' என்பது ஆன்றோர் வாக்கல்லவா? காலையிலே, மலையி லுள்ள கோனேரியில் நீராடி முடித்தபின், கோயிலுக்கு வந்து சாவகாசமாய்ச் சுவாமிதரிசனம்செய்தேன். மத்தி யானச் சாப்பாடெல்லாம் முடித்துக்கொண்டு அங் கிருந்து திருப்பதி வர எண்ணி, பஸ் நிற்குமிடத்துக்குப் போனேன். ஒரு பஸ் நின்றுகொண்டிருந்தது. அதிலேறி உட்கார்ந்தேன். புறப்பட அரைமணி நேரமிருந்தது.

எனக்கு எதிர்ப்பக்கத்தில் சென்னைவாசி யொருவர் இருந்தார். பலமுறை அவரைச் சென்னையில் பார்த் திருந்தேன். ஆனால் அவரோடு பழக்கம் கிடையாது. அவர் பெயர் என்னவோஒரு முதலியார். அவர் பக்கத் திலே, அவர் மனைவியும், இரண்டு பெண் குழந்தை களும் இருந்தார்கள். குழந்தைகள் வயது, பத்தும் ஆறும் இருக்கலாம்; தலையிலே பூ வாங்கிச் சூட்டி-

யிருந்தது. பூ என்றால், மணமுடைய மல்லிகைப் பூவல்ல; கனகாம்பரம் பூ தான்.

அப்போது, சற்று வயதான பெரியவரொருவர், தமது மனைவியையும் அழைத்துக்கொண்டு வந்து, பஸ்ஸில் ஏறி, மற்றொரிடத்தில் உட்கார்ந்தார். பூக்காரப் பெண்ணொருத்தி, பஸ்ஸைச் சுற்றிப் பூ விற்றுக்கொண்டு வந்தாள். பெரியவருடைய மனைவி, அவளைக் கூப்பிட்டு, விலையை விசாரித்தாள்.

" முழம் காலணா, அம்மா " என்றாள் பூக்காரி.

" சொல்லிக் கொடு, ரொம்ப அதிகமாய்ச் சொல் கிறாயே!"

" அரையணாவுக்கு மூணு முழம் வேணுமானால் கொடுப்பேன். அதுக்கு மேலே கிடையாது, அம்மா. வேணுமா, வேணாமா?" என்றாள் பூக்காரி.

" காலணாவுக்கு இரண்டு முழம் கொடுக்கலாம், கொடு " என்றார் பெரியவர்.

" முடியாது " என்று சொல்லிவிட்டு, பூக்காரி அவ்விடத்தைவிட்டு நகர ஆரம்பித்தாள்.

" சரிசரி, கொண்டுவா, மூணு முழந்தான் கொடு" என்று பெரியவர் மனைவி கூப்பிட்டாள்.

பூக்காரி வந்து, பூவை அளந்து கத்தரித்துக் கொடுத்துப் பெரியவரிடம் அரையணா பெற்றுக் கொண்டு, அப்பால் போய்விட்டாள். பெரியவருடைய மனைவி, பூவைக் கையில் வாங்கிய பின், எதிரிலிருந்த முதலியார் மனைவியையும் குழந்தைகளையும் பார்த்தாள். பார்த்துவிட்டு, தன்கையிலிருந்த பூமாலையில் பாதியைக்

கிள்ளித் தன் தலையில் அணிந்துகொண்டு, மீதியை மூன்று துண்டாக நறுக்கி, எதிரிலிருந்த முதலியார் மனைவியிடம் மூன்று துண்டுகளையும் நீட்டினாள்.

"பூ வைத்துக்கொள், அம்மா!" என்றாள். அந்த அம்மாளோ, முன்பின் தெரியாதவர்களிடம் எப்படி ஒன்றைப் பெற்றுக் கொள்வதென்ற எண்ணத்தில் சற்றே தயங்கினாள். உடனே அந்தப் பெரியம்மாள், எதிரிலிருந்த இரண்டு குழந்தைகளையும் தன்னருகே இழுத்து, அவைகளின் கூந்தலில் இரண்டு பூத் துண்டுகளையும் செருகிவிட்டு, "பாதகமில்லை அம்மா, பூ தானே, மல்லிகைப் பூ, வாங்கிக் கொள்" என்று மறுபடியும் நீட்டினாள். முதலியார்மனைவி, இந்தத் தடவை பேசாமல் அதை வாங்கி அணிந்துகொண்டாள்.

பிறகு, பெரியவர் மனைவி, திரும்பிப் பார்த்தாள். பஸ்ஸில் ஒரு மூலையிலே, ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள்., ஏழை; கூலிவேலை செய்து பிழைப்பவள்போலத் தோன்றினாள். அவள் மடியிலே, சுமார் ஐந்து வயதுள்ள அவள் பேத்திக் குழந்தை இருந்தது. அதன் தலை நன்றாக வாரிப் பின்னி, நார் வைத்துக் கட்டி முடியப்பட்டிருந்தது; (ரிப்பனும் பட்டு நூலும் அவளுக்கு எங்கே கிடைக்கும்?) ஆனால் பூ இல்லை. கிழவி பூவுக்கு எங்கே போவாள்! குழந்தையும் பாட்டியுமாக, தங்களுக்கு முன் வரிசையில் இருந்தவர்கள் பூ வாங்கினதையும் அணிந்ததையும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பூ இல்லையே என்ற ஏக்கம் குழந்தையின் முகத்திலே; பூ வாங்கிக் கொடுக்கக் காசில்லையே என்ற கவலையும் துயரமும் பாட்டி முகத்திலே.

இவ்வளவையும் பெரியவர் மனைவி உணர்ந்தாள். " ஐயோ ! இந்தக் குழந்தைக்கும் கொஞ்சம் பூ கொடுத் திருக்கலாமே, மறந்துபோய் விட்டேனே ! " என்று எண்ணினுள் போலிருக்கிறது. " அந்தப் பூக்காரியைக் கூப்பிடுங்கள் " என்ருள், தன் கணவரைப் பார்த்து. அவரும் கூப்பிட்டார். பூக்காரி வந்தாள். காலணுவுக்கு ஒன்றரை முழம் பூ கொடுத்துவிட்டுப் போய்விட்டாள். இந்த அம்மாள் அதை வாங்கி, " கிழவி, இந்தா, இந்தப் பூவை அந்தக் குழந்தை தலையிலே வை " என்று சொல் லிக் கொடுத்தாள். கிழவி, மிக்க நன்றி யறிதலோடு அதை வாங்கி, குழந்தையின் தலையிலே வைத்தாள். குழந்தைக்கோ, சொல்லமுடியாத சந்தோஷம்.

ஆனல் உண்மையில் அதிகச் சந்தோஷம் யாருக்கு? குழந்தைக்கா, கிழவிக்கா, பூ வாங்கியளித்த பெரியம்மா ளுக்கா என்பது சொல்லமுடியாமல் இருந்தது.

இதற்குள், பஸ் புறப்படவேண்டிய நேரம் ஆகி விட்டது. ஆனல், இவ்வளவையும் கவனித்துக் கொண்டே எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த நான், வேறெதையும் கவனிக்கவில்லை. என் மனம் இதிலேயே சென்றது. பூ வாங்கின அந்தப் பெரியம்மாள், தனக் கென்றே பூ வாங்கினுள். முதலியார் மனைவியையோ, கிழவியையோ, குழந்தையையோ அவளுக்கு முன்பின் தெரியாது. பஸ்ஸைவிட்டு இறங்கிய பிறகு, அவர்கள் யாரோ, இவர்கள் யாரோ ? தான் அணிய வாங்கின பூவை மற்றவர்களுக்கும் இந்த அம்மாள் பங்கிட்டுக் கொடுத்ததோடல்லாமல், புதிதாகவும் கொஞ்சம் வாங்கி ஒரு சிறு குழந்தைக்குக் கொடுத்தாள். பூக்காரியோடு

தர்க்கம் பண்ணியதில் ஒன்றும் குறைவில்லை. ஆனால் அதைப் பிறருக்குக் கொடுப்பதில் எவ்வளவு தாராளம்! இது என்ன காரணத்தினால்?

இதை வெறும் தருமமென்று மட்டும் நாம் நினைத்தால் போதாது; இது வெறும்தருமமல்ல. ஒருவர், தாம் அனுபவித்த ஒரு சுகத்தை, பிறரும் - முன்பின் தெரியாத யாராயிருந்தாலும்சரி, அவர்களும் - அனுபவிக்கட்டுமே என்று தாராள சிந்தனையோடு எண்ணுவது எவ்வளவு பெரிய காரியம்! இது எதைக் காட்டுகிறது? அவருடைய உள்ளத்தை மட்டுமல்ல, அந்நாட்டு மக்களின் பொதுவான இதயப்பண்பாட்டையே விளக்கிக் காட்டுகிறது.

இதையே வெகுநேரம் நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். நம்மவர்களிடத்துள்ள இந்த இயல்பை நினைக்க நினைக்க, எனக்கு எல்லையில்லாத மகிழ்ச்சியும் பெருமிதமும் உண்டாயின. வீட்டுக்கு வந்தபின் என்னுடன் இருந்த நண்பர்கள் பலரிடம் இதைச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தேன்.

கேட்ட நண்பர்களில் ஒருவர் தெலுங்கர். அவர் பெரிய கல்லூரியொன்றில் படித்துப் பட்டம் வாங்கினவர். "என்னுடைய அனுபவத்தையும் நீங்கள் அறிவீர்களானால், உங்கள் மகிழ்ச்சி இன்னும் அதிகமாகும்" என்றார் அவர். அது என்ன அனுபவம் என்று விசாரித்தேன்.

நண்பர் சொல்லலானார்: "நான் சயன்ஸ் பாடத்தில் மிக்க ஊக்கங்கொண்டு படித்துவந்தேனென்பது உங்களுக்குத் தெரியும். ஒருசமயம் எங்கள் கல்லூரிச் சயன்ஸ் ஆசிரியர் ஒருவர் வேலையைவிட்டு நீங்கியபோது, புதிய

புரொபசரொருவர் சீமையிலிருந்து வந்து வேலையை ஒப்புக்கொண்டார். அவர் மிகவும் கெட்டிக்காரரென்றும் நல்ல இயல்புடையவரென்றும் மாணவர்களிடம் நன்ருய்ப் பழகுபவரென்றும் எல்லாரும் பேசிக்கொண்டார்கள். பாடங்கள் ஏற்பாடு செய்திருந்த முறை காரணமாக, என் வகுப்புக்கு அவர் எந்தப் பாடமும் கற்பிக்கும்படியாக வாய்க்கவில்லை. இதனுல் எனக்கும் அவருக்கும் தொடர்பு ஏற்படச் சந்தர்ப்பமில்லை.

"ஆயினும், அவரைத் தெரிந்துகொள்ள எனக்கு எவ்வளவோ ஆசை. ஒருநாள், அவர் மாடிப்படியிறங்கி வந்தபோது நான் அதே படியேறி மேலே போக நேர்ந்தது. இருவரும் படியின்மத்தியில் சந்தித்தோம். அவரிடம் எனக்கு ஏற்பட்டிருந்த மரியாதை காரணமாக, சற்று ஒதுங்கி வழிவிட்டு நின்று, 'குட்மார்னிங், சார்' என்று வந்தனம் செய்தேன்.

"புரொபசர், அப்போதுதான் ஒருகணம் என்னை ஏறிட்டுப் பார்த்தார். பார்த்தபோது, அவருடைய சிவப்பு முகத்திலே அருவருப்பும் கோபமும் வெளியாயின. எனக்குக் கொஞ்சம் நடுக்கந்தான். என்ன இருந்தாலும், உபாத்தியாயரல்லவா ?

"'ஹூ ஆர் யூ?' (நீ யார்?) என்று அவர் உறுமினுர். (கேட்டார் என்று நான் சொல்லமாட்டேன்.) அச்சம் நீங்கி, நான் ஒரு மாணவன் என்பதை ஒருவாறுகச் சொன்னேன். கேட்டபோது, வேறு வார்த்தை பேசாமல் விறைப்பாக இறங்கிப் போய்விட்டார். அசடு வழியச் சிறிது நேரம் அப்படியே நின்றுவிட்டேன்" என்று சொல்லிமுடித்தார் நண்பர்.

ஐரோப்பியன் எவனையும், தெரிந்த ஒருவர் அறிமுகம் செய்துவைக்காமல், பார்த்துப் பேசுவதோ, க்ஷேமலாபம் விசாரிப்பதோ மரியாதையல்லவென்று நண்பருக்கு அப்போது தெரியாது. பிறகுதான், இந்தச் சம்பவம் மூலமாகத் தெரிந்துகொண்டார்.

"ஆகவே, இந்தச் சம்பவம் உங்களுக்குத் தெரிந்திருக்குமானால், பஸ்ஸில் பெற்ற அனுபவம் இன்னும் சுவையுடையதா யிருக்கும்" என்றார் நண்பர்.

என் கண் முன்னாலே பஸ்ஸில் நடந்த காட்சியைக் கண்டபோது, இந்தச் சம்பவம் எனக்குத் தெரியாது. இது தெரிந்தபின், பஸ்ஸிலே அந்த அம்மாள் பூ வாங்கி யளித்த செயலை எண்ண எண்ண, எனக்கு உள்ளத்திலே இன்னும் ஆனந்தம் பொங்கிற்று. இந்த ஐரோப்பியர் செயலை நினைத்தபோது, நம்மவர் உள்ளப் பண்பாடு எவ்வளவோ உயர்ந்தது என்ற கருத்தும் என் மனத்திலே தெளிவாயிற்று.

சாதாரணமாக, அந்த அம்மாள் செயல் இயல்பானதென்று நினைத்து, அதை நாம் அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. ஆனால், பிறநாட்டாருடைய செயல்களைக் கண்ட பிறகுதான், நமது பண்பாடு எவ்வளவு சிறந்ததென்பதை உணரமுடிகிறது.

"நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்" என்ற மொழி, பொன்மொழி யல்லவா?

# தொன்மைத் தொண்டர்

எனது நண்பர் தொன்மைத் தொண்டரை மிகச் சிலருக்கே தெரியும். தெரிந்தவர்கள் அனைவரும் அவரை மிகவும் பிற்போக்கான பேர்வழி என்றே கருது வார்கள். இவர்கள் கருதுவது அவ்வளவுசரியன்று. எல் லாத் துறைகளிலும் மிக்க முற்போக்குடையவராயிருக்க வேண்டுமென்று நண்பர் முயல்வது உண்மை. ஆனால், ஒன்றிலும் அப்படி யிருக்கமாட்டார். காரணம், முற் போக்கென்று கருதுகிற ஒவ்வொரு செயலுக்குமே, பழமையான ஆதாரம் இருக்க வேண்டுமென்று அவர் நினைப்பதுதான். நாம் மேற்கொள்ளும் எந்தப் புதிய வழக்கத்துக்கும், இலக்கியத்திலாவது, பழக்க வழக்கத்தி லாவது, வேறு எதிலாவது ஆதாரம் கிடைக்க வேண்டு மென்பதே அவர் கொள்கை. காலத்துக்கேற்ப நாம் செய்யும் செயல்கள் யாவற்றுக்கும் இப்படிப் பழமை யில் ஆதாரங் காண முடியுமா? முடியாது. எனவே, இந்த நண்பர் புதிதாக எந்த வழக்கத்தையுமே கைக் கொண்டதில்லை. காப்பி குடிக்கமாட்டார். (காப்பி யானது உடலுக்குக் கேடு பயக்கும் என்ற கருத்தினா லன்று.) தலைமயிர் கத்தரித்துக் கொள்வதற்குக்கூடப்

பெரிதும் தயங்குவார் என்று சொல்லிவிட்டால், வேறு இவரைப்பற்றி விவரமாக எதுவும் சொல்ல வேண்டிய தில்லை.

இப்படிப்பட்ட காரணங்களாலேயே இவருக்குத் 'தொன்மைத் தொண்டர்' என்ற அழகிய பட்டம் வந்தது.

பி. ஏ. பரீட்சையில் இவர் தேறிய சமயம், நான் இவர் வீட்டுக்குப் போயிருந்தேன். பரீட்சையில் தேறிய தற்காக எனது பாராட்டுதலைத் தெரிவிக்கும் பொருட்டு, உற்சாகமாக இவர் கையைப் பிடித்துக் குலுக்கினேன். அப்போது பார்க்க வேண்டுமே, இவருக்கு வந்த கோபத்தை! (பரீட்சை தேறியதற்காகவல்ல கோபம், நான் கையைக் குலுக்கியதற்காக!)

"விடப்பா கையை! இதெல்லாம் என்ன கெட்ட வழக்கம், கையைப் பிடிக்கிறதாம், குலுக்குகிறதாம்! வேடிக்கையாயிருக்கிறது!" என்றார்.

"இதிலென்ன கெட்ட வழக்கம் வந்துவிட்டது?" என்று கேட்டேன்.

"இதிலென்ன கெடுதலா? உன் கையைப் பார். என்ன பேனாவைப் பிடித்து எழுதிவிட்டு வந்தாயோ! கையெல்லாம் ஒரே மசி. அதிலிருக்கும் மசியும் அழுக்கும் என் கையில் ஒட்டிக்கொள்ளாதா? நீ குலுக்கின குலுக்கலிலே என் கைவேறு சுளுக்கிக்கொள்ளும்போலி லிருக்கிறது. வேண்டாம் இந்த வழக்கமெல்லாம்! அர்த்த மில்லாமல் வெள்ளைக்காரர்கள் செய்வதைப் பார்த்து அப்படியே 'காப்பி' யடிக்கிறது!" என்று உரத்துக் கூச்சல்போட ஆரம்பித்தார்.

நண்பர் மனம் அப்போது இருந்த நிலையிலே, அவரோடு வாதம் செய்வது உசிதமல்ல என்றெண்ணி, நான் பேசாமலிருந்துவிட்டேன்.

இப்படிப்பட்ட 'கட்டுப் பெட்டி', எவ்வளவுதான் முற்போக்கடைய விரும்பியபோதிலுங்கூட, 'பிற்போக்காளன்' என்ற அவச்சொல்லை நீக்கிக்கொள்ள வழியுண்டா ?

மற்ருெரு சமயம் பொங்கலன்று, சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு, இந்த நண்பர் என் வீட்டுக்கு வந்தார். 'வரவேண்டும்' என்று உபசாரம் சொல்லி, இரண்டு கைகளையும் மரியாதையாய்க் குவித்துக் கும்பிட்டு அவரை வரவேற்றேன். அவர் சமாசாரந்தான் தெரியுமே! பழைய அனுபவம் மறந்தா போய்விடும்?

ஆனல், அவர் என்னுடைய குவித்த கையை லட்சியம் செய்தவராகவே தெரியவில்லை. நேரே என் அருகில் வந்தார். வந்து, என் வலக்கையைத் தமது வலக்கையால் பற்றி, அப்படியே ஒரு குலுக்குக் குலுக்கினர். குலுக்கிக் கொண்டே, "பால் பொங்கிற்ரு ?" என்று விசாரித்தார்.

அவர் செய்த செய்கை என்னை அப்படியே தூக்கி வாரிப் போட்டுவிட்டது. 'இவரா நமது நண்பர் ?' என்றே எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது. 'பொங்கிற்று, பொங்கிற்று, சந்தோஷம்' என்றெல்லாம், அவருக்கு மறுமொழியாக ஏதேனும் உளறி யிருப்பேன். என்னுடைய தடுமாற்றத்தை உணர்ந்தவர்போல, அவர் சிரித்தபடியே கேட்டார் :

"என்ன, ஒரேயடியாய் இப்படி விழிக்கிறாய்? உன் கையைப் பிடித்து நான் குலுக்கினதில் உனக்கு அவ்வளவு வியப்பா யிருக்கிறதா?"

"வியப்பொன்றுமில்லை. நீ, நீதானா என்பது எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. நீ, நீதானே, வேறு பேர் வழியல்லவே?" என்று கேட்டேன்.

"ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"கை குலுக்குவது சுத்த அநாகரிகம், கேவலம், காட்டுமிராண்டிகள் வேலை என்று நீ சொல்லுவாயே, இப்போது உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்றேன்.

"எனக்கு ஒன்றும் புதிதாக நேர்ந்து விடவில்லை. இத்தனை நாளும் தெரியாதிருந்ததோர் அரிய செய்தியை இன்று கண்டுகொண்டேன்: அவ்வளவுதான்" என்றார் நண்பர்.

"அதென்ன அவ்வளவு அரிய செய்தி?"

"அதுதான் இந்தக் கைகுலுக்குகிற விஷயம். பூர்வமாக இது தமிழர்களுக்குரிய ஒரு பழக்கம். மேல்நாட்டினர் இதை நம்மிடமிருந்துதான் கற்றுக்கொண்டார்கள். நாமோ, இப் பழக்கத்தை மறந்தேவிட்டோம்!"

எனக்கு, முன்னிருந்த ஆச்சரியம் போய்விட்டது. ஆனால், புதிதாக ஒரு சந்தேகம் உண்டாயிற்று. கீழ்ப்பாக்கத்திலே ஓர் ஆஸ்பத்திரி இருக்கிறதாகச் சொல்வார்களே, அங்கிருந்துதான் நண்பர் தப்பி வெளியில் வந்துவிட்டாரோ? (சென்னைப்பட்டணத்துப் பழக்கம் தெரியாதவர்கள் இந்த ஆஸ்பத்திரி பைத்தியக்காரர் ஆஸ்பத்திரி என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.)

என்னுடைய சந்தேகத்தை அவர் உணர்ந்துகொண்டார். என் கேள்வியை எதிர்பார்த்து அவராகவே சொல்லலானுர்: "எனக்கு மூளைக்கோளாறு ஒன்றும் இடையாது; அதுபற்றி நீ கவலைப்படாதே. சுய அறிவோடுதான் பேசுகிறேன். கைகுலுக்குகிற இந்தப் பழக்கம் நம்மிடையில்தான் ஆதியில் இருந்ததென்பது உண்மை. பழைய காலத்திலே வியாபாரத்துக்காக இந்நாடு வந்த யவனர் முதலியோர் நம்மிடமிருந்து இதைக் கற்றுக்கொண்டு போனுர்கள். ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளெங்கும் இப்பழக்கம் பரவலாயிற்று. ஆனல், தாய்நாடாகிய தமிழ்நாட்டில் இது எப்படியோ மறைந்துபோயிற்று. எவ்வளவோ அரிய நூல்களெல்லாம் மறைந்துவிட்ட இந்தத் தமிழ்நாட்டிலே, இந்தச் சாமானிய பழக்கம் மறைந்து போவதா பெரிய காரியம்? மறந்துபோன இந்தப் பழக்கத்தை, இவ்வளவு காலங் கழித்து இந்த இருபதாம் நூற்றுண்டில், இப்போதுதான் நம் மக்கள் ஆங்கிலேயரிடமிருந்து கற்றுக்கொள்ள ஆரம்பிக்கிருர்கள்!"

"நல்லது, நீ இப்படிச் சொல்வதற்கு என்ன ஆதாரம்?" என்று கேட்டேன்.

"அப்படி வா வழிக்கு. கொஞ்சம் நம்பிக்கையோடு கேள். என் ஆதாரத்தை யெல்லாம் விளக்கமாகச் சொல்கிறேன்."

"நம்பிக்கை பிறக்கும், நீ சொல்வதை அப்படியே ஒப்புக்கொள்வேன் என்று நான் உறுதி கூறமாட்டேன். நீ சொல்வதைச் சொல். பொருத்தமாயிருந்தால், நம்பிக்கை தானே பிறக்கிறது."

"சரி சொல்கிறேன், கவனமாய்க் கேள்" என்று கூறிவிட்டு, நண்பர் மேலும் சொல்லத் தொடங்கினர்: "டாக்டர் ஐயரவர்களை உனக்குத் தெரியுமல்லவா?"

"தெரியாமலென்ன, நன்ருகத் தெரியும். ஆனல், அவர்கள் காலஞ் சென்றுவிட்டார்களே! இப்போது எப்படி உனக்காக வந்து கூண்டிலேறிச் சாட்சி கூறப் போகிருர்கள்?" என்று கேட்டேன்.

"ஆனலும் உன்னைப்போல் பதட்டம் கூடாதப்பா! ஐயரவர்கள் காலஞ் சென்றுவிட்டார்களென்ருல், அவர்கள் நமக்கு அளித்துப்போன தமிழ் இலக்கியச் செல்வமுமா போய்விட்டது? அது இருக்கத்தானே செய்கிறது?"

"சரி, மேலே ஆகட்டும். உன் சாட்சியைக் கூப்பிட்டுவிடு; எனக்கு ஆட்சேபமில்லை" என்றேன்.

"சேரமான் என்ருல் உனக்குத் தெரியுமா?"

"ஆம், கொஞ்சம் கேள்விப்பட்டிருக்கிறேன். காட்டிலே திரிகிற மானல்லவென்று தெரியும்; ஏதோ சேர நாட்டிலிருந்த பழைய காலத்து அரசர் ஒருவரே சேரமான். சரிதானே?"

"ரொம்ப சரி. சேரமான் என்பது, சேரமன்னரைக் குறிப்பிடுவதற்குப் பொதுவாக வழங்குகிற ஒரு கௌரவமான பெயர். அவ்வளவுதான். சேரர் பரம்பரையிலே, சேரமான் செல்வக் கடுங்கோ ஆழியாதன் என்ற பெயருடைய முடிமன்னனெருவன் இருந்தான்."

"எப்போது?"

"பழைய காலத்திலே; அதாவது, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே என்று வைத்துக்கொள்.

அந்தக் காலத்திலே, தமிழ்நாட்டின் நிலைமையும், முக்கிய மாக, அரசர்களுடைய இயல்புந்தான் உனக்குத் தெரி யுமே!"

"என்ன, அவர்களுடைய வீரத்தைப்பற்றிச் சொல் கிருயா அல்லது கொடைத்திறத்தைப்பற்றிச் சொல் கிருயா?" என்று கேட்டேன்.

"கொடையைத்தான் சொல்ல வந்தேன். இந்தச் சேரமானும், பெரிய வள்ளலென்று புகழ்பெற்றவன். கபிலர் என்ற புலவரிடத்திலே இவனுக்கு மிக்க ஈடுபா டிருந்தது. இவன்மீது அவர் ஒரு சமயம் பாடிய பத்துப் பாட்டுக்காக, மிக்க மகிழ்ச்சியடைந்து ஒரு லட்சம் பொன்னை அவருக்குப் பரிசிலாகக் கொடுத்தான். அதனேடுகூட, தன் நாட்டிலே ஒரு மலைமேல் ஏறி நின்று கண்ணுக்குத் தெரிந்த தூரம்வரையுள்ள நாட்டை யெல்லாம் அவருக்குத் தானம் செய்துவிட்டான். சேர மான் அத்தகைய சிறந்த வள்ளல்."

"சரி, ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், இதற்கும், நீ சொல்லிய பழக்கத்துக்கும் என்ன சம்பந்தமென்பது தான் எனக்குக் கொஞ்சமும் விளங்கவில்லை" என்றேன்.

நண்பர் சிரித்துக்கொண்டுசொல்லுகிருர்: "அதைத் தானப்பா சொல்லவருகிறேன். பொறுமையாய்க் கேள். சேரமானைப்பற்றிச் சொன்னேனல்லவா? இந்தச் சேர மானும் கபிலரும் நெருங்கிய நண்பர்களா யிருந்தார்கள். கபிலர் ஒருசமயம் சேரனிடம் விடைபெற்று, தம் மற் ருெரு நண்பனுகிய பாரியைப் பார்க்கப் போயிருந்தார். போனவர், பாரியோடு நெடுநாள் தங்கிவிட்டார். கபிலர் வரவில்லையே, வரவில்லையே என்று சேரமான் பெரிதும்

ஏங்கி, அவர் வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருந் தான். இந்த நிலையிலே, ஒருநாள் அவரும் வந்து சேர்ந்தார். சேரமானுக்கு மிக்க உற்சாகம். வந்த கபிலரை அப்படியே கட்டித் தழுவிக்கொண்டான். தழுவி, தன் உற்சாக மிகுதியினாலே, அவர் கையைப் பற்றிக் குலுக்கினான்."

"நீ சொல்வது நன்றாயிருக்கிறதே! கைகுலுக்கு வது தமிழ்நாட்டில் வழங்கிய பழைய வழக்கமென்ப தற்கு ஆதாரங் காட்டுகிறேனென்று சொல்லி, ஏதோ கதையெல்லாம் அளக்கிறாயே! இவ்வளவும் உன்னு டைய கற்பனைதானே! இது ஆதாரமாகுமா?" என்று நான் இடைமறித்தேன்.

"ஆதாரத்தைத்தான் காட்டவருகிறேன். முற்றும் கேட்டுவிடு, பிறகு நீயே முடிவு செய்துகொள்ளலாம்" என்று என்னைத் தடுத்துவிட்டு, நண்பர் தொடர்ந்து சொன்னார்: "மகிழ்ச்சி மிகுதியினாலே கபிலர் கையைப் பற்றிச் சேரமான் குலுக்கினானா? குலுக்கியபோது, அவர் கை மிருதுவாயிருந்ததாக அவனுக்குத் தோற்றிற்று. உடனே தன் கையைத் தொட்டு அழுத்திப் பார்த்துக் கொண்டான். தன் கையோ, கல்போலக்கடினமாயிருந் தது. புலவர் கைமட்டும் மென்மையாயிருக்கக் காரண மென்னவென்று எண்ணிப் பார்த்தான். ஒரு காரண மும் புலப்படவில்லை. அவரைக் கேட்டான்.

"நாமும், நம் நண்பரொருவர் நம்மைப் பிரிந்து எங்கேனும் போயிருந்து நெடு நாள் கழித்து வந்தால், சாதாரணமாய்க் கேட்பதுண்டல்லவா, 'ஊருக்குப் போனதில் மிகவும் கறுத்துப்போய் விட்டீர்களே'

என்று? அல்லது, 'என்ன, ரொம்ப இளைப்பாய்த் தெரிகிறதே, அலைச்சல் அதிகம்போலிருக்கிறது' என்று? இந்த விதமாகத்தான் கபிலரைப் பார்த்துச் சேரமானும் 'என்ன ஐயா, தங்கள் கை மிக்க மிருதுவாயிருக்கிறதே!' என்று விசாரித்தான்.

"கபிலர் சொல்கிறார்: ஆம், அரசே! என்னுடைய கை மெல்லியதாயிருப்பது உண்மை. உன்னுடைய கையால் என் கையைப் பற்றியபோது, என் கை மென்மையாயிருப்பதை நீ அறிந்தாய். ஏன்? உன் கை திண்மை பொருந்தியதாய், வலியதாயிருந்ததனாலே. ஆனால், உன் கை ஏன் வலியதாயிருக்கிறது? இதற்குக் காரணங்கள் எத்தனையோ! எத்தனைப் பகைவர்களுடைய கோட்டை வாயிலைத் தகர்த்தெறிய வேண்டி, உன் களிற்றின் பிடரிமீதிருந்து கையிலே அங்குசத்தைப் பிடித்து, கோட்டை வாயிற் கதவுகளைப் பெயர்த்தெறியுமாறு களிற்றைத் தூண்டியிருக்கிறாய்? அது போகட்டும். உனது அழகிய குதிரை மீதமர்ந்து, அதன் தலைக்கயிற்றைக் கையிலே வலிவாகப் பற்றிக்கொண்டு பகைவர் மதிற்புறத்து அகழியைத் தாண்டச் சொல்லி அக்கயிற்றை வெட்டி வெட்டி இழுத்து, எத்தனை முறை உன் குதிரையை இயக்கியிருக்கிறாய்? இதுவும் போகட்டும். தேரிலே நின்று, வில்லிலே நாணைப் பூட்டி, அம்பறாத் தூணியிலிருந்து அம்புகளை உருவி, நாணை இழுத்து அம்புமாரியைப் பெய்து, எத்தனைப் பகைவர் வெள்ளத்தைச் சிதற அடித்திருக்கிறாய்? இவ்வளவும் செய்த வலி பொருந்திய உன் கைகள் - முழந்தாள் வரையும் நீண்டு வளர்ந்த உன் கைகள் - காய்ப்பேறிக் கடினமாகாமல் என்ன செய்யும்? பரிசில்களையும் பொன்னுபரணங்

களையும் என்போன்ற புலவர்க்கும் இரவலர்க்கும் எடுத்துக் கொடுத்துக் கொடுத்து, உன் கைகள் காய்ப்புத் தழும்பு ஏற்பட்டுக் கடினமாகிவிட்டன :

> பரிசிலர்க்கு அருங்கலம்
> நல்கவும், குரிசில் !
> வலிய ஆகும், நின்
> தாள்தோய் தடக்கை !

ஆனால், என் கைகள் மெல்லியனவாயிருக்கின்றன வென்று சொன்னாயே, இதுவும் உண்மைதான். என் கை என்ன செய்கிறது ? அடாடா, எப்பேர்ப்பட்ட கடினமான காரியங்களைச் செய்துவருந்துகிறது ! அப்படி என்ன காரியமென்று கேட்பாயோ ? நல்ல அறுசுவை உண்டி, நெய், தயிர், கறிசோறு முதலியவையெல்லாம் தட்டாமல் நீ அளிக்கிறாயல்லவா ? இவற்றை அள்ளி யள்ளி வாய்க்கு ஊட்டுகிற பெரிய கஷ்டமான காரியத்தைச்செய்து செய்து என் கைகள் வருந்தின. இதனால் இவை மெல்லியனவாகவே இருக்கின்றன :

> கறிசோறு உண்டு
> வருந்துதொழில் அல்லது,
> பிறிதுதொழில் அறியா
> ஆகலின், நன்றும்
> மெல்லிய, பெரும !
> தாமே...நிற்
> பாடுநர் கையே !

உண்பதாகிய ஒரு தொழிலைத் தவிர வேறு தொழில் என் கைகளுக்குத் தெரியாதாகையினாலே,

அவை மிகவும் மென்மையாகவே இருக்கின்றன. என் கைகள் மட்டுமா? உன்னைப் பாடும் புலவர் அனைவரு டைய கைகளுமே இப்படியிருக்கின்றன என்று கூறி முடித்தார் கபிலர்.”

இந்த வரலாற்றை நண்பர் சொல்லி நிறுத்தினர். நான் கேட்டேன்: “இதெல்லாம் எதற்கு? இது புற நானூற்றுக் கதைதானே? இலக்கியத்திலே எங்கோ பழமையாகக் கண்ட ஒரு குறிப்பை வைத்துக்கொண்டு அது மெய்தானென்று இவ்வளவு தூரம் வாதாட லாமா?” என்றேன்.

“இது ஆதாரமாகாதென்றால், வேறு உனக்கு எதை ஆதாரங் காட்டுவது? இச்செய்திதான் மிக்க தெளிவாயிருக்கிறதே! சேரமான் புலவர் கையைப் பற்றிக் குலுக்கினன். கை மென்மையாயிருக்கிறதே என்று ஆச்சரியப்பட்டான். இதில் ஆச்சரியத்துக்கு இடமில்லை என்று புலவர் விளக்கமாகச் சொன்னர். அவர் சொல்லியதிலிருந்து அரசன் அவர் கையைப் பிடித் துக் குலுக்கினனென்பதும், இப்படிக் கைகுலுக்குவது அக்காலத்துப் பழக்கமென்பதும் ஏற்படவில்லையா? பாட்டிலும், பாட்டின் சந்தர்ப்பத்தைக் கூறும் குறிப்பி லும் எல்லாம் தெளிவாய்ச் சொல்லியிருக்கும்போது, இதைவிட வேறென்ன அத்தாட்சி வேண்டும்? இதை நீ ஒப்புக்கொள்ள முடியாதென்றால், வேறு உனக்கு எதைத்தான் காட்டுவது?” என்று நண்பர் அலுத்துக் கொண்டார்.

“ஒப்புக்கொள்ள முடியாதென்று நான் மறுக்க வில்லை. இதைமட்டிலும் ஆதாரமாகக்கொண்டு, கை

குலுக்குகிற பழக்கம் பழமையானதுதான், தமிழ்நாட்டுக் குரியதுதான் என்று முடிவு கட்டிவிடலாமா? வேறு எங்கேயாவது இலக்கியத்தில் இதைப்பற்றிச் சொல்லி யிருக்கிறதா? இல்லையே! ஆகவே, இந்த ஒரேயொரு குறிப்பைமட்டும் கொண்டு நீ சொல்வதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை."

நண்பர் சிரித்தார். "வேறு ஆதாரம் என்னுல் காட்டமுடியாதென்றெண்ணித் தானே நீ இப்படிப் பேசுகிருய்?" என்ருர்.

"காட்டமுடியாதது மட்டுமன்று. வேறு ஆதாரம் எப்படி இருக்கமுடியும்? இந்தப் பழக்கம் இருந்திருந் தால்தானே ஆதாரம் கிடைக்கும்? பழக்கமே கிடையா தென்பதல்லவா என் கட்சி? உன்னுடைய கற்பனைத் திறத்தை வேண்டுமானுல் நான் பாராட்டத் தயாரா யிருக்கிறேன்" என்றேன்.

"சரி, அதுபோகட்டும். வேருெரு விஷயம் உன் னைக் கேட்கிறேன். சிவஞான சித்தியார் என்று நீ கேள்விப் பட்டிருக்கிருயா?" என்ருர் நண்பர்.

"அவர் யாரப்பா சிவஞானஞ் செட்டியார்? உன் னைப்போல ஏதாவது கிறுக்கா? கை குலுக்குவது பற்றி ஏதேனும் கட்டுரை அல்லது புத்தகம் எழுதியிருக் கிருரோ!"

நண்பருக்குச் சிறிதே கோபம் வரும்போலிருந்தது. ஆனாலும், சிரித்துக்கொண்டே சொன்னுர்: "செட்டியா ரல்ல, சித்தியாரென்று நான் சொன்னேன். உனக்குக்

கொஞ்சம் மண்டை கர்வம் அதிகமாயிருக்கிறது. ஏதோ தமிழில் இரண்டொரு புத்தகங்களைப் படித்து விட்டு, எல்லாந் தெரிந்ததாகப் பாவனை பண்ணிக் கொண்டிருக்கிறாய். தெரியாதென்பதையே நீ இன்னும் தெரிந்துகொள்ளவில்லை."

"சரி, இந்தச் சித்தியாரென்பவர் யார்?"

"சித்தியார் என்றால், ஒரு மனிதரல்ல; ஒரு சாஸ்திர புத்தகம். இதை நீ முதலாவதாகத் தெரிந்துகொள். சிவஞான சித்தியார் என்பது ஓர் அரிய சைவ சித்தாந்த சாஸ்திரம்."

"இப்போது இந்தச் சித்தியாருக்கு என்ன வந்தது?" என்று நான் பொறுமை யிழந்தவனாய்க் கேட்டேன்.

"சற்று அமைதியாகக் கேள், சொல்லுகிறேன். இந்தச் சித்தியார் என்ற சாஸ்திரம் கி. பி. பதின் மூன்றும் நூற்றாண்டில் தோன்றியது. இதன் ஆசிரியர்......சரி, பெயரையெல்லாம் சொல்லி உன்னைத் திணற அடிக்க நான் விரும்பவில்லை. இந்தப் புத்தகத்தின் முதற்பாகத்திலே, இதன் ஆசிரியர் தமது சமயக் கொள்கையே மேலென்று நிலைநாட்டுவதற்காக ஒரு தந்திரம் செய்கிறார். மற்றெல்லா மதத்தினரையும் கூப்பிட்டு அவர்கள் வாதத்தைக் கேட்கிறார். அவர்கள் சொல்லிவரும்போது, ஒவ்வொருவர் சொல்வதிலும் ஏதாவது குற்றங் குறையைக் கண்டு, அதைச் சுட்டிக்காட்டுகிறார். 'உன் சமயம் இன்ன இன்ன வகையிலே குறைபாடுடையது' என்று சொல்லிக் கண்டிக்கிறார். இப்படிக்

கண்டிக்கப்படுபவர்களுள், வாமதந்திரி என்பவன் ஒரு வன். இவன் வாமதந்திரம் என்றதொரு தருக்க முறையைப் பின்பற்றுபவன். இவன் வந்து வாதம்செய்கிறுன். செய்யும்போது தவருகச் சில கருத்துக்களை வெளியிடுகிருன். இக்கருத்துக்கள், அவனுடைய சமயக் கொள்கைக்கு முரணுகவும் இவருடைய கொள்கைக்கு ஒத்தனவாகவும் இருக்கின்றன. இக்கருத்துக்களையும் கொள்கையையும் இங்கே சொல்லி உன்னைத் திண்டாட வைக்கமாட்டேன்; ஏனென்ருல், நீ அவற்றைப் புரிந்துகொள்வதும் கடினம். மேலே நடந்ததைச் சொல்லுகிறேன். வாமதந்திரி கூறிய வாதத்தைக் கேட்டபோது நமதாசிரியர் சிரித்தார். அச்சமயம் அவர் கூறிய வார்த்தைகளை மட்டும் இங்கே உனக்குச் சொல்லுகிறேன். நீயே அவற்றிலிருந்து முடிவுசெய்துகொள்.

"அவர் சொன்னுர்: 'அப்பா, வாமதந்திரி! நன்ருய்த்தான் இந்த உலகில் நீ வாழ்ந்து கடைத்தேறுவாய், போ! வெகு நன்ருக வாதஞ் செய்கிருய்! நல்லது, நீதான் எனக்கு உற்ற தோழன். ஏனென்ருல், என்னை எதிர்த்துப் பேசுகிறேனென்று வந்து, எனக்குச் சாதகமாகவே பேசுகிருயல்லவா? எங்கே, இப்படி உன் வலக் கையைக் கொடு பார்க்கலாம்; பிடித்துக் குலுக்கவேண்டுமென்று எனக்கு ஆசையாயிருக்கிறது. அறிவிலே உனக்குச் சமானமானவர்கள் வேறெவரும் இல்லை' என்று சொல்லிவிட்டு, அந்த வாமதந்திரியின் கையைப் பிடித்துக் குலுக்கினுர்."

"பேஷ், நன்ருயிருக்கிறது விஷயம். இதற்கு ஆதாரமாக நீதான் ஒரு பாட்டு வைத்திருப்பாயே, அதைச்

சொல்லு பார்க்கலாம்" என்று நான் குறுக்கே சொன்னேன்.

"ஆட்சேபனை யில்லை. சொல்லுகிறேன் கேள்" என்று கூறிவிட்டு, நண்பர் பாதி விருத்தமொன்றைப் பாடினார் :

> **வாழவே வல்லை, வாமி !**
> **வலக்கைதா, என்னு யிர்க்குத்**
> **தோழன்நீ, உன்னை ஒப்பார்**
> **சொல்லிடின் இல்லை, கண்டாய் !**

என்று பாடிவிட்டு, மேலும் பேசலானார் : "கை குலுக்குவது நம் நாட்டுப் பழைய பழக்கமென்று நான் எவ்வளவு சொல்லியும் நீ நம்பமாட்டே னென்கிறாய். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயும் இப்பழக்கமிருந்தது என்று சொல்லி, புறநானூற்றுப் பாடலை மேற்கோள் காட்டினால், அது போதாது, வேறு காட்டு என்றாய். இந்தச் சித்தியார்த் திருவிருத்தத்துக்கு என்ன சொல்லுகிறாய் ? இதிலே ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். இதன் ஆசிரியர் ஒரு துறவி, எல்லாத் தளைகளையும் அறுத்தவர், புலன்களை வென்றவர். கேலி சிரிப்பு முதலியவற்றுக்குச் சிறிதும் இடங்கொடுப்பவரல்லர். இத்தகைய துறவியே வாமதந்திரியின் வாதத்தைக் கேட்டுத் தமக்கு வந்த சிரிப்பை யடக்கமுடியாமல், 'அப்பா, வாமதந்திரி ! உன் வலது கையைக் கொஞ்சம் இப்படித் தா, ஒரு குலுக்குக் குலுக்க வேண்டும்போல் இருக்கிறது எனக்கு' என்று சொல்வாரானால், இந்தக் கைகுலுக்குகிற பழக்கம் எவ்வளவு சாமானியமானது, நம் மக்க

ளிடையே எவ்வளவு இயல்பாக வழங்கியது என்பதை நாம் எளிதில் உணரலாமல்லவா? இதற்கென்ன சொல்லு கிருய்? இன்னமும் நான் சொல்லியதை நீ நம்ப மாட்டாயோ?" என்று, வெற்றிக்குரிய பெருமிதந் தோன்ற, நண்பர் என்னைக் கேட்டார்.

நான் என்ன சொல்ல இருக்கிறது? அவர் கொண்ட முடிவை எதிர்த்து நான் ஏதாவது சொல்லி, கடைசியில் என்னைப் பார்த்து அவர், "வலக்கை தா, என்னுயிர்க்குத் தோழன் நீ, உன்னை ஒப்பார் இல்லை கண்டாய்" என்று சொல்ல நேர்ந்துவிட்டால்—?

# குடியும் மொழியாராய்ச்சியும்

இந்தத் தலைப்பு யாருக்குமே சிறிது திகைப்பைத் தரும். குடிக்கும் மொழிக்கும் ஆராய்ச்சிக்கும் என்ன தொடர்பு என்று எண்ணத்தான் தோன்றும். என்னைப் பொறுத்தவரையிலே, இந்தக் காலத்துக்கும் இவை இரண்டுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறதென்று சொல்வேன்.

முதலாவதாக, இக்காலம், குடி காலம்; இதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். யுத்தம் நடக்கிற இந்தக் காலத்திலே, சென்னை நகரத்தில் வீதிகள்தோறும் புதிது புதிதாகக் குடிக் கடைகள் தோன்றுகின்றன. குடிப்பதற்கு இல்லாமல் வீரர்களுக்கு வறட்சி ஏற்பட்டு விடக்கூடாதென்பதில் நம்மவர்களுக்குத்தான் என்ன பரிவு!

குடி என்றால் அதில் எத்தனையோ வகை; கள்ளுக் குடி ஒன்றுதான் குடி என்பதில்லை. காப்பிக் குடி தேயிலைக் குடி என்றெல்லாம் புதுக் குடியினங்கள் இன்று மலிந்திருக்கின்றன. இந்தக் குடிகள் இல்லாமல் இன்று எந்த வேலையுமில்லை. உதாரணமாக, கதை எழுதுவோரைப் பார்க்கலாம். கணக்கில்லாமல் கதைப் புத்தகங்கள்

வந்து குவிகின்றன. ஆசிரியரைக் கேட்டால், தம் கதைக்கும் காப்பிக் குடிக்கும் நெருங்கிய தொடர்பிருக் கிறதென்று சொல்வார்.

எழுத்தாளர் ஒருவர் கதை எழுதிக்கொண்டே வருகிறார். ஓரிடத்துக்கு வந்ததும், கதை ' ஓட 'மாட்டே னென்கிறது ; மூளை வேலை செய்ய மறுக்கிறது. எழுத் தாளர் பார்க்கிறார். சூடாக ஒரு 'கப் காப்பி' தருவிக் கிறார். காப்பி உள்ளே போய் வேலை செய்கிறது ; வயிற்றில் மட்டுமன்று, மூளையிலும் கூடத்தான். குழம்பியும் சோர்ந்தும் போயிருந்த அவருடைய மூளை, காப்பிக் குடி காரணமாக, தீவிரமாக வேலை செய்யத் தொடங்குகிறது ; பேனாவும் ஓடுகிறதாம் ! இப்படியெல் லாம் இக்காலத்துப் புதுத் தமிழ் எழுத்தாளர்கள் சொல்லுகிறார்கள், எழுதவும் எழுதுகிறார்கள்.

இவர்கள் மாத்திரமா இப்படிக் குடிக்கு அடிமை கள் ? அல்ல. இவர்களுக்கு அண்ணாச்சி ஒருவர் நூறு ஆண்டுகளுக்கு முன்னே இங்கிலாந்தில் வாழ்ந்தார். கட்டுரை எழுதுவதிலே மிக்க திறமை பெற்றுத் திகழ்ந் தார். அவர் பெயர் டி-க்வின்ஸி என்பது. அபினி தின்றால்தான் அவருக்கு எழுத்து வேலை ஓடுமாம். அபினி தின்று தின்று, அது காரணமாகவே அவர் இறந்து போனாரென்றும் சொல்வதுண்டு.

இப்படியாகத் தம்மை ஆட்கொண்ட அபினித் தேவதைக்கே அவர் ஒரு புராணம் பாடிவிட்டார் ! (பாட்டிலன்று, வசனத்தில்தான்.)

காப்பிக் குடி அபினிக் குடி முதலியவை இப்படி யாக எங்கெங்கெல்லாமோ புகழ் பெற்று வழங்கும்

போது, எவ்வளவோ பழமையான கள்குடி மட்டும் இவற்றுக்குச் சளைத்தா போகும்? குடிப்போர் தொகை எங்குமே மிகுதி; பழந்தமிழ் நாட்டிலும் அப்படித்தான். தமிழ் இலக்கியங்களிலே, குடியைப்பற்றியும், குடித்தோரைப் பற்றியும், குடித்துவிட்டு அவர்கள் செய்த செயல்கள் ஆடிய கூத்துக்களைப் பற்றியும் விரிவாகச் சொல்லியிருக்கிறது. இவற்றை நகைச் சுவையோடு பார்க்கும் போது, மனத்துக்கு மகிழ்ச்சியையும் ஒருவகை உல்லாசத்தையும் இவை தருகின்றன.

இலக்கியம் மூலமாக இங்கே ஒரு குடியனைப் பார்ப்போம்.

திருச்செந்தூரிலே முருகப்பெருமானுக்குத்தொண்டு பூண்டொழுகும் அடியவர்கள் சிலர் இருக்கிறார்கள்; மனவலியும் உடல்வலியும் மிகுந்த மறவர் பரம்பரையிலே வந்தவர்கள். தாங்கள் முருகனுடைய தொண்டர் என்ற எண்ணமே இவர்களுக்கு அளவு கடந்த செருக்கை யளிக்கிறது. குடி முதலிய பழக்கங்கள் பற்றி இவர்களுக்குச் சிறிதும் நாணமே இல்லை.

ஒரு நாள் மாலை நேரம்; குடி நேரம் என்றும் சொல்லலாம். ஒதுப்புறமான ஒரு கள்ளுக்கடையின் எதிரிலே இம்மறவர் சிலர் கூடியிருக்கிறார்கள். ஆளுக்கொரு கலயம். கலயத்திலிருந்த சரக்கில் பாதி உள்ளே போயிருக்கிறது. ஆடலும்பாடலுமாய் ஒரே கோலாகலமாக மெய்ம்மறந்த நிலையில் இருக்கிறார்கள். அப்போது பெரியவர் ஒருவர் அந்த வழியே வருகிறார். மேனி எங்கும் திருநீற்றுப் பூச்சு; கழுத்திலும் மார்பிலும் உருத்திராக்க மணிகள்; இடையிலே காவி உடை

கண்டோர் அடிபணிந்து வணங்கத்தக்கதொரு தோற்றப் பொலிவோடு, நாவிலே இறைவன் திருப்பெயரைச் சொல்லிப் பாடியவண்ணமாக வருகிறார். அன்றைய தினம், எப்படியோ போதாத காலமாக, வழக்கமாய்ப் போகிற வழி தவறி, இந்தக் கள்ளுக்கடை இருந்த தெரு வழியாக வந்துவிட்டார்.

நடுத்தெருவிலே வந்தார்; போக இடமில்லை. குடியர்கள் தெருவை அடைத்துக்கொண்டு தெருவெங்கும் உட்கார்ந்திருந்தார்கள். கண்டவுடனே பெரியவருக்கு முதலில் சிறிது அருவருப்பு உண்டாயிற்று. ஆனால் அதைத் தொடர்ந்து அவர் மனத்திலே, 'ஐயோ! இப்படி வீணாய்க் குடித்துக் கெடுகிறார்களே!' என்று சிறிது இரக்கம் பிறந்தது.

"ஏனப்பா இப்படி அநியாயமாய்க் குடிக்கிறீர்கள்? குடித்துக் கெட்டுப் போகிறீர்கள்? இந்தக் கெட்ட பழக்கத்தை விட்டுவிடக்கூடாதா?" என்று மெல்ல ஒரு குட்டிப் பிரசங்கம் தொடங்கினார்.

"தெரியும் ஐயா, உங்கள் சமாசாரம், தேசிகரையா! கொஞ்சம் நிறுத்துங்கள்" என்று ஒரு குரல் கேட்டது.

பேசியவன், அங்கிருந்த குடியர்களில் ஒருவன். கொஞ்சம் படிக்கத் தெரிந்தவன்; அறிவும் உடையவன்; வாய்த் துடுக்கும் அதிகமுள்ளவன்; நகைச்சுவையோடு பேசவல்லவன். மேலும் சொல்லுகிறான்:

"எங்களைத் தெரியாதா சுவாமி உங்களுக்கு? ஏதோ வெறும் குடிகாரன் என்று நினைத்தீர்கள்? உங்கள் பிரசங்கமெல்லாம் எங்களிடம் செல்லுமா?" என்று கேட்டான்.

"நீங்கள் யாராயிருந்தாலென்ன அப்பா? கள் குடிப்பது தகாத செயல் தானே?'

"யாராயிருந்தாலென்னவா? இன்னொரு தடவை அப்படிச் சொல்லாதிர்கள், சுவாமி! செந்தில் வேலர் இருக்கிறாரல்லவா, ஒரு மாங்கனிக்காகத் தோகை மயில் மீது ஏறி இந்தப் பெரிய உலகம் முழுவதையும் ஒரு நொடியில் வலம் வந்த எங்களுடைய இளைய பிள்ளை யார், அவருடைய வழி யடிமைகளல்லவா நாங்கள்? அந்த அடிமைத் திறம் என்ற செருக்கு எங்களுக்கு உண்டு:

பெருமை மாநிலம் வலம நாய்வரு
பிலி மாமயில் ஊர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி
யுள்ள மேதகு களியரேம்! *

செந்திலில் வாழும் இப்படிப்பட்ட பெருங் குடியர்கள் நாங்கள்" என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, கலயத்தில் மீதியுள்ளதை யும் எடுத்துக் குடித்தான். கள் உள்ளேபோனது எளி தில் விடுமா? வேலைசெய்கிறது. அதிக வெறியுண்டாகி, மேலும் சொல்கிறான். இடையிலே வந்து அகப்பட்டுக் கொண்ட தேசிகர் தப்பி வெளியேற முடியவில்லை; குடியன் சொல்கிறான்:

"நாங்கள் முருகனடியார், அவனுடைய அன்னை யாகிய காளிதேவிக்குப் பூசை போடுவோம்; அதிலே எவ்வளவு மகிழ்ச்சி எங்களுக்குண்டு, தெரியுமா?"

---

* களியரேம் - குடியர்களான நாங்கள்.

சாமியார் கேட்டுத் திகைக்கிறார். 'நான்தான் சிவனடியான், சிவபூசை செய்வேன் என்றெண்ணி வருகிறேன். இந்த அற்பக் குடியனே, தான் முருகனடியான் என்கிறான், தேவிக்குப் பூசை போடுவேன் என்கிறான். என்ன ஆச்சரியம்!' என்று எண்ணித் தயங்கிநிற்கிறார். குடியனுக்கோ, மகிழ்ச்சியானது குடிவெறியோடு கலந்து வெளிப்படுகிறது :

பரைமனோன்மணி புவனி நாரணி
பாலலோசனி சூலிசாம்
பவிசுகாசனி கௌரி பூசனை
பண்ணும் உள்மகிழ்(வு) எளியதோ? *

இப்படி அவன் சொன்ன பிறகு, புது அறிவு உதயமாகிறது. தேவியோடுகூட, மற்றத் தெய்வங்களும் அவன் நினைவில் தோன்றுகிறார்கள். 'கள் குடிப்பதிலே தவறென்ன வந்தது?' என்று கருதும் உள்ளத்தோடு அத்தெய்வங்களை ஒருமுறை பார்க்கிறான். திருமால் எத்தனையோ அவதாரம் எடுத்தார். என்ன உருவத்தோடு? பன்றி, மீன், ஆமை முதலிய உருவங்களோடு. ஆகவே, இப்பிராணிகளிடம் அவருக்கு விருப்பமிருந்ததென்றுதானே தெரிய வருகிறது? உருத்திரன் ஒரு கையில் மானை ஏந்தியிருக்கிறான். மான்மீது அவனுக்கு ஆசையுண்டென்று சொல்வதற்கென்ன தடை? சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயல் என்று சொல்வார்கள்;

---

* பராசக்தியும் மனோன்மணியும் புவனத்தைக் காக்கும் நாராயணியும் நெற்றிக் கண்ணுடையவளும் சூலத்தையுடையவளும் சாம்பவியும் சுகாசனத்திலமர்ந்தவளுமான கௌரி தேவியைப் பூசை செய்வதால் எங்கள் உள்ளத்திலே பிறக்கும் ஆனந்தம் கொஞ்சமா?

ஆகவே, அவன் முயலை உள்ளடக்கி யிருக்கிறானென்று சொல்வதிலென்ன குற்றம்?

இந்தக் கருத்தோடு, தேசிகரைக் கேட்கிறான்:

மருவு கேழலும் மீனும் ஆமையும்
மாய னுக்கு விருப்பமாம்;
மானி னைக்கை விடான்உ ருத்திரன்;
மதியும் நாள்தொறும் முயல்உ ணும்! *

கேட்டார் தேசிகர். 'மதியாவது முயலாவது உண்ணவாவது!' என்றெண்ணித் தத்தளித்தார். அவனோ விடுபவனாயில்லை. மேலும் பேசுகிறான்:

"சுவாமி, மீதியுள்ளதையும் கேளுங்கள். உங்களுடைய தெய்வங்கள் அனைவரும் இப்படிப் பிராணிப் பிரியர் ஆனார்களா? இனி, மனிதர் செய்தியையும் கேளுங்கள். அந்தணர் இருக்கிறார்களல்லவா? எவ்வளவோ தூய ஒழுக்கமுடையவர்கள் என்று நீங்கள் வியக்கிறீர்கள். அவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள்? யாகத்திலே பசுவைக் கண்டால் விடுவார்களா?"

அரிய வேள்வியில் அந்த ணாளர்கள்
சுரபி கண்டிடில் முந்துவார்!

என்று முடித்தான். தேசிகருக்குப் போதும் போதுமென்றாகிவிட்டது. ஓட வழி பார்த்தார். அவனா விடுபவன்? அல்லது அவனுடைய குடிவெறிதான் விடுமா?

"ஐயா, இவ்வளவும் ஒருபக்கம் இருக்கட்டும். என்னவோ, கள் குடிக்காதே, மதுவருந்தாதே என்றெல்

---

*கேழல் - பன்றி. மாயன் - திருமால். மதி - சந்திரன். உணும் - உண்ணும், உள்ளடக்கும்.

லாம் நீங்கள் உபதேசம் செய்ய வந்தீர்களே! அந்த மதுவின் பூர்வீகம் தெரியுமா உங்களுக்கு? அதையும் கொஞ்சம் தெரிந்து கொள்ளுங்கள். உங்களுடைய தெய்வங்களெல்லாம், தேவர்களாகிய சுரர்களுக்குப் பரிந்துகொண்டு போய் அசுரர்களோடு சண்டை போட்டார்கள் என்று புராணக்கதை சொல்வீர்களே! அந்தச் சுரர்கள் யார்? தேவர்கள், வானவர். அவர் களுக்கு ஏன் அந்தப் பெயர் வந்தது? யோசித்துப் பாருங்கள். வானவர் யாவரும் சுராபானம் என்ற ஒருவகை மதுவை அருந்திய காரணத்தால் சுரர் என்று சொல்லப் பெற்றார்கள். மிகவும் சாதாரணமான இந்த உண்மை, அதாவது இந்தச் சொல் பிறந்த வரலாறு கூடவா உங்களுக்குத் தெரியாமற் போய்விட்டது?" என்று கேட்கிறான்:

ஐய னே! சுரர் ஆயி னர், சுரை
அருந்தி வானவர் யாருமே! *

"இப்படியாகத் தேவர்களே மது அருந்துகிறார்கள் என்று சரித்திரம் கூறும்போது, நாங்கள் கள் குடித்த தனால் என்ன கெட்டுப் போய்விடும்?" என்ற பாவத் திலே அந்தக் குடியன், மொழி வரலாற்றைத் துணை கொண்டு சாமியாரைக் கேட்கிறான்.

அவன்பேரில் குற்றமில்லை. இக்காலம், குடிக்குரிய காலம் என்று தொடக்கத்தில் எப்படிச் சொன்னேனோ அப்படியே மொழியாராய்ச்சிக்கு முரிய காலமென்று சொல்வேன். எங்குப் பார்த்தாலும் ஆராய்ச்சி: கால ஆராய்ச்சி, சரித்திர ஆராய்ச்சி; சமய ஆராய்ச்சி, சாத்திர

* சுரை - சுராபானம்; ஒருவகைக் கள்.

ஆராய்ச்சி; இலக்கிய ஆராய்ச்சி, இலக்கண ஆராய்ச்சி ஒலி ஆராய்ச்சி என்றெல்லாம் எத்தனையோ வகை. இவ்வளவுக்கும் இடையிலே, மொழியாராய்ச்சிக்கும் குடிக்கும் தொடர்பில்லை என்று தள்ளிவிட முடியுமா? அதுவும், இளைய பிள்ளையாருடைய செந்திலில் வாழும் மேதகு களியரொருவர் ஆராய்ந்து தமது முடிபை இவ்வளவு திட்டமாக வெளியிடும்போது?

பெருமை மாநிலம் வலம தாய்வரு
பீலி மாமயில் ஊர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி
யுள்ள மேதகு களியரேம் -
பரைம ஞேன்மணி புவனி நாரணி
பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை
பண்ணும் உள்மகிழ்(வு) எளியதோ? -
மருவு கேழலும் மீனும் ஆமையும்
மாய னுக்கு விருப்பமாம்;
மானி னைக்கை விடான்உ ருத்திரன்;
மதியும் நாள்தொறும் முயல்உ ணும்;
அரிய வேள்வியில் அந்த ணாளர்கள்
சுரபி கண்டிடில் முந்துவார்;
ஐய னே!சுரர் ஆயி னர்,சுரை
அருந்தி, வானவர் யாருமே!

நாமே அந்தக் குடியருடைய மொழியாராய்ச்சியை மறுக்க இயலாதிருக்கும்போது, ஓட வழி கிடைக்காமல் திணறுகின்ற சாமியார், பாவம், என்ன செய்வார்? அவன் சொன்ன கதைகளைச் சிந்திப்பாரா, அல்லது அவன் குடியைக் கண்டு இரங்குவாரா, அல்லது குடி வெறியில் அவனுக்குப் புலப்பட்ட மொழிநூலுண்மையைக் கண்டு வியப்பாரா?

# வேட்டை நினைவுகள்

உலகம் பலவிதம் என்று சொல்வார்கள். இந்தப் பல விதத்துள் ஒவ்வொன்றிலும் எவ்வளவோ நயமான அனுபவம் அடங்கியிருக்கிறது.

நம்முடைய நண்பர்களைப் பார்க்கலாம். ஒவ்வொரு வரும் தனித்த ஒவ்வோர் இயல்புடையவராயிருக்கிறார். ஒருவருக்குத் தெரிந்தது மற்றவருக்குத் தெரியாது; அவருக்குப் பிடித்தது இவருக்குப் பிடிக்காது. இரு வருக்கும் பிடித்த விஷயங்கள் நமக்குப் பிடிக்கமாட்டா. இருவருக்கும் தெரிந்தவை நமக்குத் தெரியமாட்டா. ஆயினும், அவரவருக்குப் பிடித்தவற்றிலும், அவரவர் மனமொன்றி ஈடுபட்டவற்றிலும், அவரவர் கண்ட உண் மைகளையும் பெற்ற அனுபவத்தையும் கேட்க நமக்கு எவ்வளவோ சுவையுண்டாகிறது.

பயிர்த்தொழிலில் ஒருவர் ஈடுபட்டிருக்கிறார். நிலங் களின் தராதரத்தையும், பலவேறு நெல் வகைகளின் தன்மையையும், மழை நீர் ஆற்று நீர் முதலியவற்றின் இயல்பையும், பயிர்த்தொழிலிலே மற்ற ஆட்களோடு பழகவேண்டிய முறையையும் அவர் சொல்லச் சொல்ல, நாம் சுகமாகவே கேட்டுக்கொண்டு வருகிறோம்.

ஆராய்ச்சி; இலக்கிய ஆராய்ச்சி, இலக்கண ஆராய்ச்சி ஒலி ஆராய்ச்சி என்றெல்லாம் எத்தனையோ வகை. இவ்வளவுக்கும் இடையிலே, மொழியாராய்ச்சிக்கும் குடிக்கும் தொடர்பில்லை என்று தள்ளிவிட முடியுமா? அதுவும், இளைய பிள்ளையாருடைய செந்திலில் வாழும் மேதகு களியரொருவர் ஆராய்ந்து தமது முடிபை இவ்வளவு திட்டமாக வெளியிடும்போது?

பெருமை மாநிலம் வலம தாய்வரு
பிலி மாமயில் ஊர்நியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி
யுள்ள மேதகு களியரேம் -
பரைம னேன்மணி புவனி நாரணி
பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை
பண்ணும் உள்மகிழ்(வு) எளியதோ? -
மருவு கேழலும் மீனும் ஆமையும்
மாய னுக்கு விருப்பமாம்;
மானி னைக்கை விடான்உ ருத்திரன்;
மதியும் நாள்தொறும் முயல்உ ணும்;
அரிய வேள்வியில் அந்த ணாளர்கள்
சுரபி கண்டிடில் முந்துவார்;
ஐய னே!சுரர் ஆயி னார்,சுரை
அருந்தி, வானவர் யாருமே!

நாமே அந்தக் குடியருடைய மொழியாராய்ச்சியை மறுக்க இயலாதிருக்கும்போது, ஓட வழி கிடைக்காமல் திணறுகின்ற சாமியார், பாவம், என்ன செய்வார்? அவன் சொன்ன கதைகளைச் சிந்திப்பாரா, அல்லது அவன் குடியைக் கண்டு இரங்குவாரா, அல்லது குடிவெறியில் அவனுக்குப் புலப்பட்ட மொழிநூலுண்மையைக் கண்டு வியப்பாரா?

# வேட்டை நினைவுகள்

உலகம் பலவிதம் என்று சொல்வார்கள். இந்தப் பல விதத்துள் ஒவ்வொன்றிலும் எவ்வளவோ நயமான அனுபவம் அடங்கியிருக்கிறது.

நம்முடைய நண்பர்களைப் பார்க்கலாம். ஒவ்வொரு வரும் தனித்த ஒவ்வோர் இயல்புடையவரா யிருக்கிருர். ஒருவருக்குத் தெரிந்தது மற்றவருக்குத் தெரியாது; அவருக்குப் பிடித்தது இவருக்குப் பிடிக்காது. இரு வருக்கும் பிடித்த விஷயங்கள் நமக்குப் பிடிக்கமாட்டா. இருவருக்கும் தெரிந்தவை நமக்குத் தெரியமாட்டா. ஆயினும், அவரவருக்குப் பிடித்தவற்றிலும், அவரவர் மனமொன்றி ஈடுபட்டவற்றிலும், அவரவர் கண்ட உண் மைகளையும் பெற்ற அனுபவத்தையும் கேட்க நமக்கு எவ்வளவோ சுவையுண்டாகிறது.

பயிர்த்தொழிலில் ஒருவர் ஈடுபட்டிருக்கிருர். நிலங் களின் தராதரத்தையும், பலவேறு நெல் வகைகளின் தன்மையையும், மழை நீர் ஆற்று நீர் முதலியவற்றின் இயல்பையும், பயிர்த்தொழிலிலே மற்ற ஆட்களோடு பழகவேண்டிய முறையையும் அவர் சொல்லச் சொல்ல, நாம் சுகமாகவே கேட்டுக்கொண்டு வருகிருேம்.

நமக்கோ, பயிர்த்தொழில் என்ருல், வயலிலா வரப்பிலா என்பதுகூடத் தெரியாமலிருக்கக் கூடும்; ஆயினும், சொல்கிறவர் சொல்லும் தன்மையினுல், கேள்வி மூல மாக விஷயத்தை அனுபவிப்பதில் நமக்குச் சுவை சிறிதும் குறைவதில்லே.

மாடு வளர்ப்பதில் மற்ெருருவர் தேர்ச்சி பெற்றவர். அவர் சொல்வதையும் அப்படியே ஆவலோடு நாட் கணக்காகக் கேட்டுக்கொண்டிருக்க நாம் தயார்: நாய் வளர்ப்பதிலே ஒருவருக்கு மோகம். இன்னெருருவருக்குப் பூந்தோட்டம் வைப்பதிலே ஆசை. வேெருருவருக்குச் சமையலிலும் சாப்பாட்டிலும் தனியான ருசி. இப்படி எத்தனே எத்தனேயோ வகைகள்.

என்னுடைய நண்பரொருவர், இளேஞர். நல்ல செல்வர். பிறருடைய தயவையோ சௌகரியத்தையோ எதற்கும் எதிர்பார்க்க வேண்டிய அவசியம் அவருக்கு இல்லே. மற்றவர்களோடு பழக வேண்டிய நிலேமையும் அவருக்கு இல்லே. இருந்த போதிலும், ஒரே ஒரு சமயத்தில் அவர் தம்முடைய பெருமையையும் அந்தஸ்தையும் மறந்துவிட்டு, எல்லாரோடும் சாதாரணமாய்க் கலந்துகொண்டு பேசிப் பழகுவார். அந்தச் சமயம் என்னவென்ருல், அவருக்கு மிகவும் உவப்பான தொழிலேப்பற்றி அவர் பேசத் தலேப்படுகிற சமயம்.

அவருக்கு மிகவும் உவப்பான தொழில், வேட்டைத் தொழில்; வேட்டையைப்பற்றி அவர் பேசத் தொடங்கிஞல், அவருடைய உற்சாகம் எல்லே கடந்து போய்விடும். வேட்டைக்குப் போவதையும் பிராணிகளேத் தேடுவதையும், அவற்றினிடமிருந்து தப்பியோடுவதையும், உணவில்லாமலும் உறக்கமில்லாமலும்

காட்டில் துன்பப்படுவதையும் அவர் சொல்ல ஆரம் பித்து விட்டாரானால், பிறகு நாள் முழுதும் அவருக்கும் நமக்குமே ஊணும் உறக்கமும் தேவையில்லை, பேச் சொன்றே போதும் என்ற நிலைமை ஏற்பட்டுவிடும். அவ்வளவு ஊக்கத்தோடு அவரும் பேசுவார், நம்மையும் கேட்கச் செய்வார்.

ஒருமுறை, குற்றால மலைமேலேயுள்ள அருவியில் முழுகுவதற்காக இந்த நண்பரோடு போக நேர்ந்தது. பாதையிலே இருபுறமும் நெருங்கி உயர்ந்து வளர்ந்த தேக்குமரங்கள் ; வேறு பல காட்டு மரங்கள். இடை யிடையே கிராம்பு, சாதிக்காய் போன்ற சிறு மரங்கள். நீர்வளமோ சொல்லவேண்டாம், அவ்வளவு அதிகம். தவிர, எங்கும் குளிர்ந்த நீரோட்டம். இவற்றையெல் லாம் நின்று நின்று பார்த்து அனுபவித்துக்கொண்டே போனபோது, 'பாதையில் புலி கரடி போன்ற காட்டு மிருகங்கள் வருமா?' என்ற கேள்வி எழுந்தது. காட்டு வழி யென்றால் எங்களுக்கு அச்சந்தான். நானும் மற்ற நண்பர்களும் காட்டையே பார்த்திராத வர்கள் ; வேட்டையே கேட்டிராதவர்கள். காட்டு மிருகங்களைப்பற்றி எங்களுக்குத் தெரிந்ததெல்லாம் புத்தகத்திலே படித்த காரியந்தான். ஆகவே, புலி கரடி வருமா வராதா என்பதுபற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியாததில் வியப்பில்லை.

எங்களுடைய வேட்டைக்கார நண்பர் உடனே ஆரம்பித்துவிட்டார்: "காட்டு மிருகங்களெல்லாம், மனிதர் நடமாடுகிற இந்த மாதிரிப் பாதையில் பகல் நேரத்திலே வரமாட்டா. இரா நேரத்தில்தான் அவை

வெளிவரும்; ஆகவே, நாம் இப்போது அச்சமின்றிப் போகலாம்'' என்றார்.

ஒன்றுமே தெரியாமலிருந்த எங்களுக்குச் சிறிது ஊக்கம் பிறந்தது. "என்னென்ன மிருகங்கள் இங்கே உண்டு?" என்று கேட்டோம்.

"எல்லா மிருகங்களும் உண்டு. மலையணில், காட்டு மான், வரையாடு போன்ற சாதுவான மிருகங்கள்முதல், சிறுத்தை, கரடி, காட்டெருமை, யானை, புலி முதலிய கொடிய மிருகங்கள் வரையில் எல்லாம் உண்டு. ஆனால் சிங்கம் கிடையாது'' என்றார்.

அவருடைய உற்சாகத்தைக் கண்ட பிறகுதான் மெல்ல விசாரித்து, அவர் வேட்டைத் தொழிலிலே வல்லவர் என்பதை அறிந்துகொண்டோம். பிறகு அவரை விடுவோமா? ஒவ்வொன்றாய்க் கேள்விகளைக் கேட்டுக்கொண்டே வந்தோம். எங்களுடைய உற்சாகம் வரவர அதிகமாயிற்று.

"வேட்டையாடக் கற்றபோது, முதல்முதலாக எந்தப் பிராணியைச் சுட்டுப் பழகிக்கொண்டீர்கள்?'' என்று கேட்டோம்.

"கேட்பானேன்? மானைத்தான். மானிலே, மிளா முதலிய எத்தனையோ வகை. இவை நம்மைத் துரத்தி வரமாட்டா. உயர்ந்த பாறைகளிலே, காடு அடராத திறந்த இடத்தில் முளைத்துக்கிடக்கும் புல்லை இவை மேய்ந்துகொண்டிருக்கும். பதுங்கியிருந்து இவற்றைச் சுடுவோம். ஆனால், ஆரம்பத்தில்தான் இவற்றைச் சுட மனம் வரும். வேட்டையில் கொஞ்சம் கொஞ்சமாகத்

தேர்ச்சிபெற்ற பிறகு, ஒரு தீங்கும் அறியாத இந்தப் புல்வாயைச் சுடுவதென்றால் வெட்கமா யிருக்கும்."

"பின் வேறு எந்த மிருகங்களை வேட்டையாடுவது உற்சாகமா யிருக்கும்?"

"புலியும் யானையுமே வேட்டையிலே உற்சாகத்தைக் கொடுக்கும். திறமையான வேட்டைக்காரன் இவைகளையே தேடித் திரிவான். பழகின பிறகு மற்ற மிருகங்களை அவன் ஒரு பொருளாக எண்ணமாட்டான். காட்டெருமைகளும் ஓரளவுக்கு ஆபத்தானவை."

"எருமை எப்படி ஆபத்தானது?"

"காட்டெருமை நாட்டெருமையைவிட வடிவிலே மிகவும் பெரியது. நீண்டு பருத்து வளைந்த கொம்புகளையுடையது. கொம்பினாலே அது ஒரு குத்துக் குத்தினால், எவ்வளவு பெரிய சுவரும் இடிந்து விழுந்துவிடும்; மரங்களும் பாறையும் நிலையை விட்டு அசைந்துவிடும். தவிர, ஆளைக் கண்டுவிட்டால் ஓடாது; வேட்டைக்காரனை விடாமல் துரத்தும். அகப்பட்டால் ஆள் தீர்ந்தவன்தான். தரையில் மோதி, நெற்றியாலும் கொம்பாலும் தேய்த்துக் கொன்றுவிடும்."

"சரி, சிறுத்தை வேட்டை எப்படி? அதுவும் பயங்கரமானது தானா?"

நண்பர் சிரித்தார். "சிறுத்தை எல்லாம் எங்களுக்கு நாய்போல. கையிலே பெரிய கத்தி இருந்தால் போதும், சிறுத்தையை அடிப்பதற்கு; நல்ல குண்டாந்தடி இருந்தாலும் சரிதான். வேட்டைக்காக நாங்கள் சிறுத்தையைத் தேடிப்போவது வழக்கமில்லை."

சிறுத்தை விஷயத்தில் நண்பருக்கிருந்த தைரியம் எங்களுக்கு வருமா? வராது. ஆகவே, அதை விட்டு விட்டு, புலி வேட்டையைப்பற்றிக் கேட்டோம். புலி என்றவுடனே அவருக்கு எவ்வளவோ உற்சாகம் பிறந்து விட்டது. உண்மையிலேயே புலி வேட்டையில் அவர் பெரிதும் ஈடுபட்டிருந்தமையால், வேகமாக அதைப் பற்றிப் பேசத் தொடங்கினர் :

"புலிகள் பகல் முழுவதும் தங்கள் குகையிலும் புதரிலும் பதுங்கி யிருந்துவிட்டு, இரா நேரத்தில்தான் இரை தேடி வெளிவரும். ஆகவே, புலி வேட்டை என்பது பெரும்பாலும் இரவில்தான் நடக்கும். புலி போகிற பாதையில் ஓர் ஆட்டையோ மாட்டையோ கட்டி வைத்துவிடுவோம். கட்டின அன்றிரவிலே புலி வந்து ஆட்டின் கழுத்தில் வாயை வைத்து இரத்தம் முழுவதையும் உறிஞ்சிவிட்டுப் போய்விடும்; மறுநாள் இரவுதான் அது திரும்பிவந்து ஆட்டின் இறைச்சியைத் தின்னத் தொடங்கும்; அப்போதுதான் வேட்டை யாடுவோம்."

"புலி போகிற பாதை என்றீர்களே, பாதை இன்னதுதான்என்று எப்படி உங்களுக்குத் தெரியும்?"

"அதுவா? பகல் நேரத்தில் காட்டிலே பார்த்துக் கொண்டே போகும்போது, சில இடங்களிலே புலி தன் காலால் தரையைப் புறண்டிக் குழி தோண்டியிருப்பதை வரிசையாகக் காண்போம். புலி தன் குகையைவிட்டு இரைதேடிக் கிளம்பியபோது, இம்மாதிரிக் குழி தோண்டி அதில் மூத்திரம் பெய்து வைத்துவிட்டுப் போகும்; திரும்பி வருகையில் இதை மோப்பம் பிடித் துக்கொண்டே தன் குகைக்கு வந்து சேர்ந்துவிடும்.

தரையில் புலியின் கால் நகம் பட்ட அடையாளத்தைக் கொண்டு, அந்த இடத்தில் புலி நடமாடுகிறதென்றும், அதுவே புலிபோன தடமென்றும் நாங்கள் உறுதி செய்துகொள்வோம்.''

"சரி, இரண்டாம் நாள் இரவு வருகிற புலியை நீங்கள் எப்படி வேட்டையாடுவீர்கள் ?''

"பொழுதோடேயே நாங்கள் சாப்பாட்டை முடித்துக்கொண்டு, மரத்தடிக்குப் போய்விடுவோம். மரத்தின் மேலே சௌகரியமாகப் பரண் அமைத்து, அதில் இராமுழுதும் கண்விழித்துக் காத்துக்கொண்டே யிருப்போம். மரத்திலே புலிக்கு வேண்டிய இரையைக் கட்டி வைக்காமல் காத்திருப்பதும் உண்டு. எங்கே நாம் சற்றுக் கண்ணயர்ந்தால் புலி போய்விடுமோ என்ற சந்தேகத்தில், இராமுழுதும் இமை கொட்டாமல் காத்திருப்போம்.''

"பரணில் இருப்பது சௌகரியமாயிருக்குமோ ?''

"இராது, எவ்வளவோ கஷ்டம். தூக்கம் கண்ணைச் சுற்றிக்கொண்டே யிருக்கும். தப்பித் தவறித் தூங்கிக் கீழே விழுந்துவிட்டால் அபாயம். கீழே பெரிய மலைப்பாம்புகள் போகும். ஒரே வாயில் அவை மனிதனை அப்படியே விழுங்கிவிடும். இந்தப் பயம் ஒரு பக்கம் இருக்க, காட்டுக்கொசுவின் உபத்திரவம் வேறு. காட்டுக் கொசுவானது, நாட்டுக்கொசுவைவிட மிகப் பெரியதாயிருக்கும். அதனிடமிருந்து தப்பவேண்டி மரத்தின்மேலே கொசு வலை கட்டிக்கொள்வது சாதாரண வழக்கம்.''

"எதிர்பார்த்தபடி புலி தவறாமல் வந்துவிடுமோ ?''

"வராது. பலநாள் புலியைக் காணுமலே கழியும். என்ருவது ஒருநாள் புலி வந்தால் எங்கள் பாடு கொண் டாட்டந்தான். 'டார்ச்' சின் ஒளியிலே புலியின் கண் ணுனது பார்க்கச் செந்தணலைப்போல் தோன்றும்; எரி கிற பந்தம் என்று சொல்வது மிகையல்ல. குறிபார்த் துச் சுட்டால், ஒரே குண்டில் புலி இறந்து விழுந்து விடும். சில சமயம் இரண்டாம் முறை சுடுவதும் உண்டு. ஆனுல் கையிலோ காலிலோ சுடுபட்டுத் தப்பிப் போய்விட்டதானுல், நமக்கு மிகவும் ஆபத்து. சுடுபட்டு ஓடிய புலியானது மிக்க ஆத்திரங்கொண்டு வழியிலே பதுங்கியிருந்து, நாம் திரும்பி வரும்போது நம்மைத் தாக்கிக் கொல்லாமல் விடாது."

"திரும்பி வரும்போது எப்படித் தாக்கும்?"

"திரும்பி வரும் வழியில் பதுங்கியிருக்கும். இர வானுலும்சரி, பகலானுலும்சரி, சுட்டவன் வரும்போது அவன்மீது பாய்ந்துவிடும். இப்படித்தான் ஒரு கலெக் டர் ஒரு புலியைச் சுட்டார். குண்டுபட்டுச் சாகாமல் அது தப்பியோடிவிட்டது. வழியிலே நின்று, அவர் திரும்பியபோது அவரைத் தாக்கி, ஒரு கையை வாயினுல் பலமாகக் கவ்வி யிழுத்தது. அப்போது அவருடன் வந்த வேட்டையாள் ஒருவன், அவர் கையை அப்படியே துண்டித்துவிட்டு, புலியையும் கொன்று, அவரை மீட் டான். ஒரு கை யிழந்த போதிலும் உயிரிழக்காமல் தப்பினுர்! வஞ்சம் தீர்ப்பதில் புலி அவ்வளவு கொடுமை யான ஆத்திரமுடையது."

"புலி மனிதனைத் துரத்தும் என்கிருர்களே, உண்மைதானு?"

"அப்படியல்ல. ஒரு புலியானது மனிதனை ஒரு முறை கொன்று தின்று மனித ரத்தத்தின் ருசி கண்டு விட்டதானல், பிறகு மனிதனைக் கண்டால் விடாது. துரத்திக் கொன்றுவிடும். இந்த ருசி தெரியாத மற்றப் புலிகள் துரத்தமாட்டா."

"சரி, நாட்டிலிருக்கிற நம் போன்ற மக்கள்தாம் புலிக்குப் பயப்படுகிருர்கள். ஆனல், நீலகிரிபோன்ற மலையிலே, தோடர் முதலிய சிலவகைக் காட்டு மக்கள் இருக்கிருர்களே, இவர்கள் புலிக்குப் பயப்படுவார் களா?"

"மாட்டார்கள். இவர்கள் புலியோடு காட்டில் பழகவேண்டி யிருப்பதனல், புலியென்ருலே இவர் களுக்குப் பயம் விட்டுப்போய்விட்டது. சிறுத்தையைச் சின்ன நரி என்றும் புலியைப் பெரிய நரி என்றும் விளை யாட்டாகச் சொல்வார்கள். புலி வருகிறதென்று கண் டால் உடனே ஒரு மரத்தின்மீது ஏறிக்கொள்வார்கள். புலி அப்பாற் சென்றபின், மரத்தைவிட்டிறங்கி முன் போலச் சென்றுவிடுவார்கள்."

"இவர்கள் வாழ்க்கை எப்படி?"

"இன்னும் இவர்கள் காட்டுமிராண்டிகளாகவே வாழ்கிருர்கள். காட்டுக் கிழங்குதான் இவர்கள் உணவு. வேட்டையாடச் செல்வோருக்கு உதவி புரிந்து, அவர் கள் தரும் அரிசி, துணி முதலியவற்றைப் பெற்றுக் கொள்ளுகிருர்கள். இந்தத் துணியை இவர்கள் உடுப்ப தெல்லாம் வெளியில் வரும்போதுதான். வீட்டுக்குள் எந்த உடையுமே இவர்கள் அணிவதில்லை."

"நீங்கள் வேட்டைக்காகத் திரியும்போது பசித்தால் என்ன செய்வீர்கள்?"

"பசிக்குமிடத்தில் கையோடு உணவு எடுத்துச் செல்லமுடியாது. அதற்காக எப்போதும் சட்டைப் பையில் வெங்காயமும் கருப்புக்கட்டியும் வைத்திருப் போம். பசியெடுக்கும்போது இவற்றை வாயிலே போட்டுக்கொண்டால் பிறகு பசி தோன்றுவதில்லை."

"கரடிகளை நீங்கள் அதிகமாய்க் காண்ப தில்லையோ?"

"கரடி வேட்டை மிக்க தொந்தரவானது; ஏனென்ருல், கரடியின் மேலெல்லாம் கனத்த ரோமம் அடர்ந் திருப்பதனுலே, அதைச் சுட்டால் குண்டு லேசில் பாயாது. தவிர, கரடி ஆளைத் துரத்தும்; இரண்டு காலிலே நின்று எதிர்த்துச் சண்டைபோடும். நாம் மரத்தில் ஏறினுலும், பின்னுலேயே ஏறி வந்து சண்டை போடும்! மலைப்பக்கத்தில் பதநீருக்காகச் சாணுன் பனை மரத்தில் கலயம் கட்டிவைத்திருப்பான்; கரடி, மரத் தின்மேலேறிப் பதநீரையோ கள்ளையோ குடித்து விட்டுக் கலயத்தை உருட்டிவிடுமென்று சாதாரணமாகக் கேட்டிருக்கிறீர்களல்லவா? இந்தத் தொந்தரவுகளினுல், நாங்கள் பெரும்பாலும் கரடி வேட்டைக்குப் போவ தில்லை."

"இப்படியாக, உங்கள் வேட்டையிலெல்லாம் ஆபத்தும் பயமும் அதிகமே யொழிய, ரசமான விஷ யம் கிடையாதுபோலிருக்கிறதே!" என்று கேட்டோம்.

"வேடிக்கை எத்தனையோ உண்டு. சில சொல்லு கிறேன், கேளுங்கள்" என்ருர் நண்பர்.

"பரணில் ஏறும்போது, சில சமயம் தெரியாமல் தேனடைகளைக் கலைத்துவிட நேரும். அவற்றிலுள்ள தேனீக்கள் வடிவில் பெரியவை, அன்றியும் கொடியவை. கதண்டு என்று அவைகளுக்குப் பெயர். மனிதனை எளிதில் விடமாட்டா. எவ்வளவு ஓடினாலும் விடமாட்டா; துரத்திவந்து கொட்டும். அவற்றின் விஷமும் கொடியது; உடலெல்லாம் வீங்கிவிடும்; சில சமயம் மரணம் நேருவதுமுண்டு. தெரியாமற் போய் இந்தத் தேனடையைக் கலைத்துவிட்டவர்கள், தேனீக்காகப் பயந்து ஓடித் தண்ணீரில் விழுவார்கள். தண்ணீரில் முழுகி எழுந்தாலும் இவை தொடர்ந்து வரும்! தொடராமல் தப்புவதற்காக, தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு ஓடித் தண்ணீரில் இறங்குவது வழக்கம்; இறங்கி, முண்டாசை அப்படியே கழற்றி நீரில் மிதக்க விட்டு விட்டு, முழுகி வேறிடத்தில் வெளிக் கிளம்பி, ஓடிப் போய்விடுவார்கள். மிதக்கும் முண்டாசை ஆளென்று நினைத்து, இக்கதண்டுகள் கொட்டிக்கொண்டேயிருக்கும். இப்படித் தப்பாவிட்டால் வேறு வழியில் தப்ப இயலாது" என்றார்.

இந்த வேடிக்கையை நாங்கள் எண்ணிக்கொண்டிருக்கையிலேயே, "நாங்கள் செய்யும் மற்றொரு வேடிக்கையைக் கேளுங்கள்" என்றார் நண்பர். "மலையாடுகளுக்கு வரையாடு என்று பெயர். இவை உயர்ந்த பாறையிலுள்ள புல்லை மேய்ந்துகொண்டிருக்கும். ஆளரவங் கேட்டாலும், வெள்ளைத் துணியைக் கண்டாலும் வெருண்டு ஓடிவிடும். ஆகவே, வேட்டையாடுவதற்கு ஒரு தந்திரம் செய்வதுண்டு. தலையிலே பசுங் கொடிகளால் முண்டாசு கட்டி, அதில் புல்லையும் பசுங்

தழையையும் செருகிக்கொண்டு ஒரு புதரடியில் ஒளிந் திருப்போம். செடி கொடி என்றெண்ணி ஆடு அதை மேய நெருங்கி வரும்போது அதைச் சுடுவோம்" என்ருர்.

இப்படிப் பேசிக்கொண்டே போனபோது, வழியில் ஒரு தோட்டம் வந்தது. அதிலே காவற்காரனுயிருந்த வன், நம் நண்பருக்குத் தெரிந்த ஒரு ஷிகாரி (அதாவது, வேட்டையில் உடன் வந்து துணைபுரியும் வேட்டைக் காரன்). இருவரும் வேட்டை சம்பந்தமான எத் தனையோ விஷயங்களைக் குறித்துப் பேசிக்கொண்டார் கள். திடீரென்று நம் நண்பர், "அதோ பார், மாட சாமி, அந்த மருதமரத்துக் கிளையிலே - ஓர் அணில்" என்ருர். உடனே அவன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஓடிவந்தான். இருவரும் அம்மரத்தை நோக் கிச் சந்தடி செய்யாமல் மெல்ல ஓடலானுர்கள்.

"ஓர் அணிலுக்காகவா இவ்வளவு ஓட்டம், பர பரப்பு!" என்று நாங்கள் அலட்சியமாக எண்ணி, நண்பர் சுட்டிய திசையிலே கூர்ந்து பார்த்தோம்.

ஒரு மருத மரத்தின் கிளையிலே பெரிய மலையணி லொன்று உட்கார்ந்திருந்தது. மலையணிலை நாங்கள் சென்னை மிருகக் காட்சிச்சாலையில்தான் பார்த்திருக் கிருேம். இதற்குப் பெயர்மட்டுந்தான் உபசாரமாக அணில் என்பது. உண்மையில் இது அணிலைவிட எத் தனையோ மடங்கு பெரியது, எவ்வளவோ அழகானது. கன்னங்கரேல் என்று ஆட்டுக்குட்டிபோலக் கறுத்த நீண்ட உருவம். உடலெங்கும் நீண்ட அடர்த்தியான கரிய ரோமம், மிக நீண்டவால்; வாலிலும், அடர்த்தியான தோகை போன்ற அழகிய கறுத்த ரோமம். உடலின்

கருநிறமானது, முதுகுப்புறமிருந்து மார்பையும் வயிற்றையும் அணுகி வரவர, அழகான செந்நிறமாகவும் பொன்னிறமாகவும் மாறிவந்தது. மார்புப்பக்கமிருந்த ரோமமானது பொன்னிற ஒளி பெற்றுப் பொலிந்தது. அகன்ற உடலின்மீது, சிவந்த தோற்றமுடைய அழகான சிறிய தலை. அந்தப் பிராணியின் உருவம், பார்க்கப் பார்க்க, விவரிக்க முடியாததொரு மென்மையும் கவர்ச்சியும் உடையதாய்த் தோற்றியது.

இதற்கிடையிலே மழை தூற ஆரம்பித்தது. ஒரு சாதிக்காய் மரத்தடியிலே நாங்கள் ஒண்டிக்கொண்டு நின்றோம். துப்பாக்கியோடு மாடசாமியை அழைத்துக் கொண்டு நண்பர் அணிலைத் தொடர்ந்து போய்விட்டார். கீழே முள்ளென்றும் பாராமல், மழை தூறுவதையும் பொருட்படுத்தாமல், அவ்விருவரும் அதைத் தேடி வெகுநேரம் சுற்றித் திரிந்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். மீண்டும் எங்களைக் காண்கிற வரையில், நண்பருக்கு, நாங்கள் உடன்வந்ததாக நினைவே இல்லை !

வேட்டையிலே உற்சாகமென்றால் எப்படியிருக்குமென்பதை அப்போது நாங்கள் நேரே கண்டுவிட்டோம்.

பிறகு அந்த இடத்திலிருந்து புறப்பட்டு மேலே சென்றோம். குரங்குகள் சுற்றிலும் ஏராளமாயிருந்தன. " இவற்றை நீங்கள் சுடுவதுண்டா ? " என்று நண்பரை வேடிக்கையாகக் கேட்டோம்.

" பாவம், இவற்றை ஏன் நாங்கள் சுடப்போகிறோம் ! வேறு பிராணிகளைச் சுடுவதில் துப்பாக்கிச் சத்தம் கிளம்பியவுடனே, குரங்குகள் கையால் முகத்தை

மூடிக்கொண்டு அழ ஆரம்பித்துவிடும். இப்படியிருக்க, இவற்றையும் சுடுவார் உண்டா?" என்றார் அவர்.

பிறகு சற்று யோசித்துப் பார்த்து, "யானை வேட்டையைப் பற்றி நீங்கள் ஒன்றும் சொல்லவேயில்லையே?" என்று வினவினோம்.

"யானையிலே, மதங்கொண்ட யானை ஒன்றை மட்டுந்தான் வேட்டையாடலாம் என்பது சர்க்கார் உத்தரவு; பிற யானைகளைக் கொஞ்சமும் துன்புறுத்தலாகாது. அவற்றைச் சுட்டால் தண்டனை. அவை மனிதரைக் கண்டு துரத்தமாட்டா. மதங்கொண்ட யானைதான் மனிதர்மீது பாய்ந்து துரத்தி வரும். அதன் பொட்டை நோக்கிக் குறி வைத்து அடித்தால், ஒரே குண்டில் யானையை அடித்துவிடலாம். மதயானையைக் கொன்றவர்களுக்கு அதன் தந்தத்தையே பரிசாக அளித்து, சர்க்கார் வெகுமதியும் கொடுக்கிறார்கள்."

"இதுதான் மதங்கொண்ட காட்டு யானை என்று எப்படித் தெரிந்துகொள்வீர்கள்?"

"பொதுவாக யானைகளுடைய வாழ்க்கை காட்டில் மிக்க இன்பம் பொருந்தியதா யிருக்கும். மதங்கொண்ட யானைதான் தன் இனத்தினின்றும் பிரிந்து தனியே ஓடும்; இது ஒன்றே போதுமான அடையாளம். மற்றக் காட்டு யானைகள் கூட்டங் கூட்டமாகவே செல்லும். நம்மைக் கண்டாலும் இவை ஒன்றும் செய்யமாட்டா. கூட்டத்தைப் பார்க்கவே எவ்வளவோ அழகாயிருக்கும். சில இடங்களிலே, இவை கூட்டமாக ஆற்றிலிறங்கித் துதிக்கையைச் சுருட்டித் தண்ணீர் படாமல் மேலே தூக்கிக்கொண்டு குளிக்கும் காட்சியும் ஆற்றைக்

கடக்கும் காட்சியும் பார்ப்பவர் மனத்தைக் கொள்ளை கொண்டுவிடும். இவ்வளவு பெரியஉருவமுடைய இந்தப் பிராணிகளின் வாழ்க்கையை நாம் எங்கே பார்த்திருக் கிறோம்? ஆகவே, கூட்டத்தைக் காட்டிலே பார்க்கப் பார்க்கப் புதுமையாயிருக்கும், இன்பமாயுமிருக்கும். அன்றியும் இவற்றின் வாழ்க்கையே அழகான வாழ்க்கை. ஒரு யானை நோய்ப்பட்டதானல், மற்ற யானைகள் அதற் காகத் தீனியும் தண்ணீரும் கொண்டுவந்து கொடுப்ப தைக்காண நம் உள்ளம் உருகிவிடும். ஒரு யானை இறந்து போனல், மற்றவை யாவும் ஒன்றுகூடி, பிடிப்பிடி மண் ணைத் தங்கள் துதிக்கையால் அள்ளிவந்து போட்டு, இறந்த உடலை மூட முயலும் காட்சியும் அப்படியே. யானைக் கூட்டம் போகும்போது, முன்னணியிலும் பின் னணியிலும் பெரிய களிறுகள் போகும். இடையிலே பிடிகளும் கன்றுகளும் வரும். முதலிலே போகும் யானை தன் முன்னங் காலைத் தூக்கித் தரையிலே அழுந்தவைத்து, யானை பிடிக்க வேடர் தோண்டி வைத்த குழி ஏதேனும் கீழே இருக்கிறதோ என்ற அச் சத்தோடேயே பார்த்துக்கொண்டு போகும். தவறி ஒரு யானை அப்படிப்பட்ட குழியில் வீழ்ந்துவிட்டால், மற்றவை ஒன்றுகூடி, மரக் கிளைகளையும் கொடிகளையும் வீசி, குழியில் வீழ்ந்த யானையை மேலே தூக்க முயல்கிற காட்சி மிக்க பரிதாபமா யிருக்கும்" என்று நண்பர் விடாமல் சொல்லிக்கொண்டே போனர்.

இவற்றை நாங்கள் கேட்டபோது, நக்கீரதேவ ருடைய அனுபவமொன்று எனக்கு நினைவு வந்தது.

இவர் திரு ஈங்கோய் மலையிலே இருந்து மலை வளத்தை அனுபவித்திருக்கிறார். அங்கே யானைகள்

மிகுதி. வேடர்களுடைய தினைப்புனத்துக்குள்ளே இவை புகுந்து மிதித்துத் துவைத்து அழித்துவிடும். யானைகள் வராமல் தடுப்பதற்காக, அவை வரும் வழியிலே, புனங்களின் அருகே நாலாபுறத்திலும் வேடர்கள் பெருங் குழிகள் தோண்டி அவற்றை மெல்லிய கொம்புகளாலும் தழையாலும் மூடி வைப்பார்கள். தவறிப்போய் எப்போதாவது ஒரு யானை அக்குழியில் விழுந்து விடும்; இதைக் கண்ட மற்ற யானைகள் பிறகு அவ்வழியே வரமாட்டா.

ஆனால் சில யானைகள் அறிவுடையவை. அவை இப்படிப்பட்ட குழிகளில் விழாமல் தப்புவதற்காக, நீண்ட மரக்கிளையை முறித்து, அதைத் தண்டாகத் துதிக்கையால் பற்றி, கீழே தரை கெட்டியாக இருக்கிறதா என்று முன்னாலே ஊன்றிப் பார்த்துத்தான் அடி வைக்கின்றனவாம். இந்தச் செயலை நக்கீரதேவர் கண்டிருக்கிறார் :

**கொடுவிற் சிலைவேடர்**
**கொல்லை புகாமற்**
**படுகுழிகள் கல்லுதல்பார்த்(து)**
**அஞ்சி - நெடுநாகம்**
**தண்டுன்றிச் செல்லுஞ்சீர்**
**ஈங்கோயே! தாழ்சடைமேல்**
**வண்டுன்று தாரான்**
**மலை.***

---

* கல்லுதல் - தோண்டுதல். நெடு நாகம் - பெரிய யானை. வண்டூன்று தாரான் - தேனீக்கள் மொய்க்கின்ற மாலையணிந்த சிவபெருமான்.

காட்டிலே வாழ்கின்ற கொடிய விலங்கான யானை யானது, தான் பிறர் கையிலகப்படாமல் தப்புவதற்கு இப்படியெல்லாம் தந்திரம் செய்யக் கற்றுக்கொண் டிருக்கிறதென்றால், அதன் அறிவை நாம் என்னவென்று வியப்பது? ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே இந்த யானைகளைக் கண்ட புலவரும் இந்த அறிவைக் கண்டு வியந்து அதை இப்படிப் பாராட்டி யிருக்கிறார்.

யானைகளின் செயலையும் அறிவையும் குறித்துத் தம் அனுபவத்தை நண்பர் சொல்லி வந்தபோது இந்தப் பாடலை நினையாதிருக்க முடியவில்லை.

நண்பருடைய பேச்சருவியிலே தோய்ந்திருந்த நாங்கள், செண்பகாடவி அருவிக்குப் போனோம், அதில் மூழ்கினோம் என்ற நினைவே இல்லாமல் வீடு வந்து சேர்ந்தோம்.

# அறுபத்துமூவர் விழா

தருமதேவதையின் அவதாரமென்றே சொல்லத்தக்கவர் தரும புத்திரர். அநீதியையும் அதருமத்தையும் போக்கி, தருமத்தை நிலைநாட்ட வேண்டியவர். பெயரே 'தரும புத்திரர்'. இப்படிப்பட்டவர் சூதாடத் துணிந்து விட்டாரென்றால், அது எவ்வளவு கேடான செயல்? உலகத்திலே தருமம் என்ன ஆவது? இவற்றை எண்ணி, பாரதியார் மிகவும் ஆத்திரப்படுகிறார்:

**கோயில் பூசை செய்வோர் - சிலையைக்**
**கொண்டு விற்றல் போலும்**

இருக்கிறது தரும புத்திரர் செயல் என்று சொல்லி வருந்துகிறார்.

நமது இந்து சமயத்துக்கே உயிர் நாடியாயுள்ளவை கோயில்கள். கோயில்களிலே பூசை செய்யும் குருக்களுக்கு இவ்விஷயத்தில் மிக்க பொறுப்புண்டு. நமக்குச் சமய உணர்ச்சி குன்றியிருப்பது, சமய வழிபாட்டை நிறைவேற்றி வைக்கும் பொறுப்புடைய குருக்களிடத்திலேயே இருக்கிறது. ஆகவே, இந்தக் குருக்கள்மார் சமய ஒழுக்கத்திலே குன்றிவிடுவார்களானால், அக்குறை

சமயத்துக்கே பெருங்கேடல்லவா? தாம் பூசைசெய்து வரவேண்டிய விக்கிரகத்தைக் குருக்கள்ஒருவர் வெளியே கொண்டுபோய் விற்றுவிடுவது எவ்வளவு கொடுமை யான செயல்?

பணத்தாசையாலே, நம் நாட்டில் சிலர் அரிய சிலை களைப் பிற நாட்டாருக்கு விற்றுவிட்டார்கள். இப் படிப்பட்ட செயல்கள் சில பாரதியார் காலத்தில் நிகழ்ந் தன. அவற்றை யறிந்தே அவர் மனம் நொந்து இவ் வாறு கதறினர். இக்கொடுஞ் செயல் இந்த இருபதாம் நூற்றுண்டுக்கு மட்டும் உரியதென்று நாம் ஒருகால் நினைப்போம். தமிழிலக்கிய சரித்திரத்தைச் சற்றுக் கவனித்தால், இக்கொடுமை முற்காலத்திலும் இருந் திருப்பது தெரியவரும்.

நானூற்றிருபது ஆண்டுகளுக்கு முன், விஜயநகரத் தில் கிருஷ்ணதேவராயர் அரசாண்டார். தமிழ் நாட் டில் பெரும் பகுதி அவருக்கு உட்பட்டிருந்தது. ராயர், சிறந்த வீரர்; ஒப்பற்ற வள்ளல்; கலைச்சுவை தேரும் பண்பும் பொருந்தியவர். அவருடைய சபையிலே, ஆந்திரர்கள் மட்டுமன்றி, தமிழர் பலரும் இருந்தார்கள். தமிழ்க் கவிஞர்கள், சமய ஆசாரியர்கள், சிற்பிகள், இசைவாணர்கள் முதலிய பலர் அவரால் ஆதரிக்கப் பெற்றிருந்தார்கள்.

ராயருடைய வீரத்தையும் வள்ளன்மையையும்விட, அவருடைய நீதி பரிபாலனமே நாடெங்கும் அவருக்கு அதிக புகழைத் தந்தது. தமது நாட்டில், எவ்வளவு தூரத்திலே, எந்த மூலையில் என்ன அநீதி நடந்தாலும், அது எப்படியோ அவருடைய காதுக்கு எட்டிவிடும். நீதி தவறியவனுக்கு உடனே தண்டனை கிடைக்கும்;

அவன் தப்பமுடியாது. இதை எல்லோரும் அறிந்திருந் தார்கள்.

ஆனாலும், ராயருடைய ஆட்சியிலே, தமிழ் நாட்டில் ஒரு கோயிலில் நடந்து வந்த அக்கிரமங்கள் மட்டும் கேட்பாரற்றுப் பெருகியிருந்தன. திருவாரூர்ச் சிவாலயம் மிக்க புராதனமானது. அங்கே பூசை செய்த அர்ச்சகருள் தலைமையானவர் நாகராசா அல்லது நாக ராசநம்பி என்ற பெயருடைய குருக்கள். ஆலய நிர்வாகத்திலும், பூசை முறைகளிலும் எத்தனையோ முறை கேடுகள் இருந்தன. இவற்றுக்கெல்லாம் காரணமாயிருந்தவர் இந்த நாகராசக் குருக்கள். ஊரில் இவருக்குச் செல்வாக்கு அதிகம். ராயருக்கும் இவரிடம் நல்ல மதிப்பு. ஆகவே, இவருடைய தீய செயல் ஒன்றும் வெளிப்பட வழியில்லாமலிருந்தது. பலர், ராயரிடம் புகார் செய்ய முயன்றார்கள்; சில செய்திகள் ராயர் காதிலும் விழுந்தன. ஆனால் பலன் ஒன்றும் ஏற்படவில்லை.

அதே திருவாரூரில் செல்வரான ஒரு பக்தர் வாழ்ந் தார். தினந்தோறும் கோயிலில் தொண்டு செய்வதிலேயே அவர் தம் வாழ்நாளைக் கழித்துவந்தார். ஒரு சமயம், ஆலயத்திலுள்ள எல்லா மூர்த்திகளுக்கும் புது வஸ்திரம் அணிவித்துப் பார்க்கவேண்டும் என்ற ஆசை அவருக்கு உண்டாயிற்று. இதைக் கோயில் அதிகாரிகளிடமும் நாகராசக் குருக்களிடமும் தெரிவித்துக் கொண்டார். அவர்களும், அது நல்ல காரியந்தான் என்று சம்மதித்தார்கள். "இன்னும் பத்து நாளில் அறுபத்துமூவர் திருவிழா வருகிறதல்லவா? அன்றைக்குக் காலையில் மூர்த்திகளனைவருக்கும் அபிஷேகம்

செய்து, புது வஸ்திரம் சாத்தலாம். வேண்டிய ஏற்பாடு களைச் செய்து, வஸ்திரங்களையும் வாங்கி வைத்திரும்" என்றார்கள். பக்தர் மகிழ்ச்சி யடைந்தார். விரை விலேயே அதற்கு வேண்டியவற்றைச் செய்யத் தொடங் கினார். எல்லா மூர்த்திகளுக்கும், மூலஸ்தானம் தொடங்கி, அறுபத்துமூவர், நவக்கிரகங்கள் வரையில், வேண்டிய வஸ்திரங்களைத் தனித் தனியாகச் சித்தம் செய்து வைத்தார்.

விழாவன்றைய தினம் அதிகாலையில் எழுந்து, நீராடி, கோடி உடுத்தி, சிவபூசையெல்லாம் முடித்துக் கொண்டார். பிறகு கோயிலில் மூர்த்திகளுக்கு அணி விப்பதற்காகத் தாம் வாங்கி வைத்திருந்த புது வஸ்திரங் களை ஒரு மூட்டையாகக் கட்டி, தம் ஆள் தலையிலே வைத்துக் கோயிலுக்கு அனுப்பிவிட்டுத் தாமும் பின்னாலே வந்தார்.

வருகிற வழியிலே, அவ்வூர்க் கன்னான் வீடு இருந்தது. அவனிடத்திலே தமக்கு வேண்டியிருந்த ஒரு சிறு வேலையைச் சொல்லிவிட்டுப் போகலா மென்று எண்ணி, அவ்வீட்டு வாயிலில் சென்று கன்னானைக் கூப்பிட்டார். இவர் கூப்பிட்ட குரலைக் கேட்ட கன்னான், தன் கையில் வைத்திருந்த ஏதோ ஒரு பொருளை அவசர அவசரமாக மேல்துண்டைப் போட்டு மூடிவைத்துவிட்டு, ஓடிவந்தான். எதையோ தெரியா மல் ஒளித்தானென்பது பக்தருக்குத் தெரிந்தது. ஆயி னும், அதைப்பற்றிக் கவலைகொள்ளாமல், தாம் நினைத்த வேலையை அவனிடம் சொல்லிவிட்டு, விரைந்து கோயிலை நோக்கிச் சென்றார். அவருடைய மனமெல் லாம் ஆலயத்திலும் புது வஸ்திரத்திலுமே இருந்தது

கன்னுடைய அந்தரங்கமென்ன என்பதில் அப்போது அவர் சிந்தனை செல்லவில்லை.

கோயிலுக்குப் போனதும், ஒவ்வொரு மூர்த்தியாக அபிஷேகம் பண்ணச்செய்து, தாம் கொண்டுவந்திருந்த புதுப் பட்டு வஸ்திரங்களை முறையாகத் தம் கையாலேயே எடுத்தெடுத்துக் கொடுத்து அணிவித்து அலங்கரிக்கச் செய்து கண்டு மகிழ்ந்தார். அவருடைய கண்ணும் மனமும் ஒருங்கே குளிர்ந்தன.

பல சன்னிதிகளிலே இந்த அலங்காரங்கள் ஆயின. விநாயகர், முருகன், வன்மீகநாதர், அம்பிகை, தியாகராசர், நடராசர் முதலிய சன்னிதிகளெல்லாம் முடிந்த பின், கடைசியாக, அறுபத்துமூவர் விக்கிரகங்களிருந்த இடம் வந்தார்கள். நாகராசக் குருக்களும் அவருக்கு உதவியாயிருந்த மற்றொருவரும், பரிவாரத்தினரும், நமது பக்தரும் இருந்தார்கள். நேரமோ அதிகமாகி விட்டது.

அப்போது குருக்கள் சொன்னார்: "ஐயா, அதிகக் களைப்பா யிருக்கிறீர்களே, போய்ச் சிறிது நேரம் இளைப்பாறுங்கள். இன்னுமுள்ள பூசையெல்லாம் கொஞ்சந் தானே? விரைவிலே முடிந்துவிடும்."

"ஆகட்டும், மீதியுள்ளதையும் கூட இருந்து பார்த்துவிட்டால், இந்தக் களைப்பு எனக்கு ஒரு பொருட்டல்ல. எல்லாம் முடிந்த பிறகே போகிறேன்" என்றார் பக்தர்.

நாகராசக் குருக்களுடைய முகத்திலே, ஒரு கண நேரம், சொற்பக் கவலைக் குறி காணப்பட்டது. மறு கணமே அது மறைந்துவிட்டது. தமக்கு உதவியாயிருந்த குருக்களைப் பார்த்து, "மீதியுள்ள பூசையை

நீர் கவனித்துக்கொள்ளும். எனக்கு அதிகக் களைப்பா யிருக்கிறது. நிற்க முடியவில்லை" என்று சொல்லி விட்டு, அவருடைய பதிலுக்குக் காத்திராமலே போய் விட்டார். சின்னக்குருக்கள் அறுபத்துமூவர் பூசையை நடத்திக்கொண்டு வந்தார். நமது பக்தரும், தாம் வைத் திருந்த புது வஸ்திரங்களை ஒவ்வொன்முக எடுத்துக் கொடுத்துக்கொண்டே வந்தார். ஆனல், அங்கிருந்த கடைசி விக்கிரகத்துக்கும் எடுத்துக் கொடுத்து முடிந்த வுடனே, அவர் கையில் இரண்டு வஸ்திரங்கள் மீதியாக நின்றுவிட்டன!

பக்தருக்குப் பெருத்த வியப்பாயிருந்தது. எத்தனைப் பரிவட்டங்கள் வேண்டுமென்று முன்னதாகவே கணக் கிட்டு, தனித்தனியாக வைத்திருந்தார். அறுபத்துமூவர் விக்கிரகங்களுக்காக வைத்தவற்றிலே மட்டும் இரண்டு பரிவட்டங்கள் மிஞ்சுவதென்முல், அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. சிலைகளை முதலிலிருந்து வரிசையாக எண்ணிப் பார்த்தார். அறுபத்துமூன்று இருக்க வேண்டிய இடத்தில், அறுபத்தொரு சிலைகளே இருந் தன! இரண்டு சிலைகளைக் காணும். இப்படியும் உண்டா என்றெண்ணியபோது, அவருக்கு அதிகக் கோபமுண்டாயிற்று. சின்னக் குருக்களைக் கேட்கலா மென்று போனர். அவரோ அங்கு இல்லை; பூசைகளை முடித்துக்கொண்டு வெளியே போய்விட்டார்.

பக்தருக்கோ, மனம் நிலைகொள்ளவில்லை. நேரே நாகராசக் குருக்கள் இருந்த இடத்துக்குச் சென்முர். "என்ன சுவாமி, அறுபத்துமூவர் சிலையிலே இரண்டு சிலைகளைக் காணுமே? எங்கே போய்விட்டன?" என்று கேட்டார்.

"என்ன ஐயா, உளறுகிறீர்! சிலையாவது காணு மாவது!"

"இல்லை, சுவாமி, உண்மையைத்தான் சொல்லு கிறேன். இரண்டு சிலைகளைக் காணவில்லை. நான் கண் டதையே நம்ப முடியவில்லை! என்னமோ, கோயிலில் நம்மாலான அற்ப கைங்கரியத்தைச் செய்வோமென்று வந்தால், இங்கே......"

"ஓய், நிறுத்துங்காணும், உம்முடைய கைங்கரியமு மாச்சு, நீருமாச்சு. ஏதோ கெஞ்சினீரே என்றெண்ணி, போனல் போகிறதென்று கொஞ்சம் இடம் கொடுத்தால், நீர் அதைக் காணும், இதைக் காணும் என்று சொல்லுகிறீர். உமக்கு இடங் கொடுத்ததே பிசகு என்று இப்போது தெரிகிறது......"

பக்தர் கொஞ்சம் மானி; இப்படியெல்லாம் பேசிக் கேட்டவரல்ல. ஆகவே, பதில் பேசாமல் வெளியே வந்துவிட்டார். நாகராசக் குருக்களைப்பற்றி ஊரார் பராமரிக்கையாய்ச் சொல்லிக்கொண்டது அவர் காதில் விழுந்திருந்தது. அதையெல்லாம் அவர் முன்னமே பொருட்படுத்தியதில்லை. ஆனல், அந்த வார்த்தைகள் முற்றிலும் உண்மை யென்பதை இப்போது தாமே நேரில் கண்டார். அவர் உள்ளம் பதைத்தது. இவ் வளவு பெரிய கோயிலில், பொறுப்பு வாய்ந்த ஓர் அர்ச்சகர், தாம் ஊழலை எடுத்துக் காட்டியபோது இப்படி எடுத்தெறிந்து பேசுவதென்றல்! அவருக்குக் கோபமும் வருத்தமும் தாங்கவில்லை.

இந்த வருத்தத்தோடு வீட்டுக்குத் திரும்பினர். திரும்பும்போது இரண்டு விஷயங்கள் அவருக்கு ஞாப கம் வந்தன. முதலாவது, நாகராசக்குருக்கள் நடத்தை.

அறுபத்து மூவர் விக்கிரகத்துக்குப் பூசை செய்ய வந்த போதுதான் குருக்களுக்குக் களைப்பு உண்டாயிற்று! பூசையைச் சின்னக் குருக்களிடம் ஒப்புவித்துவிட்டுப் போய்விட்டார். இதனால், சிலைகள் காணமற் போனது அவருக்குத் தெரிந்திருக்குமோ என்று சந்தேகிக்க இடமேற்பட்டது. அவரே இதற்குக் காரணமா யிருக்கக் கூடும் என்றும் பக்தர் நினைத்தார்.

மற்றொரு விஷயம், கன்னன் வீட்டில் காலையில் அவர் கண்ட காட்சி. கன்னன் மறைக்க முயன்ற பொருள் ஒரு சிலைதானே என்று அப்போதுதான் அவருக்கு மனத்தில் ஓர் ஐயம் எழுந்தது. அதையும் பார்த்துவிடலாம் என்று எண்ணிக்கொண்டே வந்தார். கன்னன் வீடும் நெருங்கி விட்டது. ஓசைப்படாமல், உள்ளே என்ன நடக்கிறதென்று ஒரு பலகணி வழியாகக் கூர்ந்து பார்த்தார். கன்னன், தெருக்கதவைத் தாளிட்டுவிட்டு, உலைக்கூடத்தருகிலிருந்து, ஒரு விக்கிரகத்தை நறுக்கி உருக்கிக் கொண்டிருந்தான். மற்றொரு விக்கிரகம் ஒரு மூலையில் அரைகுறையாக மூடி வைக்கப் பட்டிருந்தது. இவற்றைக் கண்டவுடன், அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. குருக்கள் சிலைகளை எடுத்து விற்றுவிட்டார்; கன்னன் வாங்கி உருக்கிக்கொண்டிருக்கிறான்!

கதவைத் தட்டி, கையுங்களவுமாய்க் கன்னனைப் பிடித்து விடலாமென்றால், நடக்கிற காரியமா?

கோயிலதிகாரிகளிடம் போய் இந்த அக்கிரமத்தைக் குறித்து முறையிட்டுக் கொண்டார். அவர்களிலொருவரும் விசாரிக்க முன்வரவில்லை. குருக்களுடைய தீச்செயல்கள் அவர்களுக்குத் தெரியும். அன்றியும், ராயர்

வரையில் அவருக்குச் செல்வாக்கு உண்டு என்பதையும் அவர்கள் நன்ருய் அறிவார்கள். ஆகவே, அவர்கள் விசாரிக்கத் துணியாததில் வியப்பில்லை.

நமது பக்தரோ, தாம் கண்டதை அப்படியே விட்டு விடுபவரா யில்லை. நேரே கிருஷ்ணதேவ ராயரிடமே போய்ச் சொல்லி, கோயில் நிலைமையைத் திருத்த வேண்டும் என்று தீர்மானித்தார். ஆனல், அக்காலத் தில், திருவாரூரிலிருந்து விஜயநகரம் செல்வதென்ருல், எளிதான காரியமா? தூரமோ அதிகம். வண்டி வசதி களும் குறைவு. இருந்தபோதிலும், அவர், எப்படியோ ஒருவகையாகப் பிரயாணம் செய்து, இரண்டு மூன்று மாதங்களில் விஜய நகரம் போய்ச் சேர்ந்தார். போன லும், ராயர் பேட்டி கிடைப்பது அவ்வளவு எளிதா? இல்லை. எத்தனையோ நாள் அரண்மனைவாயிலில் காத் திருந்து பார்த்தார். வாயிற்காவலன் உள்ளே விட்டால் தானே? பாவம், அந்த விஜயநகரத்து வாயிற்காவலனும் திருவாரூர் நாகராசக் குருக்களின் கையாள்தான் என் பதை அவர் எப்படி அறிவார்!

சில மாதங்கள் ஆயின. ராயரைப் பேட்டி காண முடியாமல், மனமுடைந்து தம்மூருக்கே திரும்பிவிட் டார். கோயிலுக்குச் சென்று, தினந்தோறும் சுவாமி யிடமே தமது குறையைச் சொல்லி வந்தார். ஆனல், சுவாமியோ, புற்றிடங்கொண்ட வன்மீகநாதர்; மண் மயமான அவர் இதயம் இளகவில்லை. சீக்கிரத்திலே இவருடைய குறையை அவர் கேட்பதாய்க் காணேம்.

இதற்கிடையில், தல யாத்திரையாக ராயர் தென் ஞட்டுக்கு வரப்போகிருரென்று ஒரு வதந்தி யுண்டா யிற்று. திருவாரூருக்கும் அவர் வரக்கூடுமென்றும்,

வந்தால் இரண்டு நாள் தங்குவாரென்றும் தெரிய வந்தது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்ள எண்ணினார் நமது பக்தர். ஆனால், நேரான முறையில் ராயரைப் பேட்டி காண முடியாதென்பதும் அவருக்குத் தெரியும். விஜய நகர அனுபவம் மறந்தா போய்விடும்?

அவருக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. வீட்டிலே ஒரு கிளி வளர்த்து வந்தார். அது கூர்மையான அறிவுடையது; நன்றாகவும் பேசவல்லது. அந்தக் கிளியைக் கொண்டு தம்முடைய குறையை ராயரிடத்தில் சொல்லிக்கொள்ளலாம் என்று தீர்மானித்தார். ராயரைப் போல் ஓர் உருவச்சிலை அமைக்கச்செய்தார். அந்தச்சிலையைக் காணும்போதெல்லாம், "கிருஷ்ணதேவ ராயா" "கிருஷ்ணதேவ ராயா" என்று சொல்லும்படி கிளியைப் பழக்கினார். பல நாள் பழக்கிய பிறகு, கிளியும், ராயர் பெயரைத் தெளிவாக உச்சரிக்கக் கற்றுக் கொண்டது. பிறகு அவர் கிளிக்கு ஒரு பாட்டுச் சொல்லிக் கொடுத்தார். சில நாளில், கிளி அதையும் தெளிவாய்ச் சொல்லக் கற்றுக்கொண்டது. கிளியையும் ராயர் சிலையையும் வைத்து, அந்த பக்தர் தம் வீட்டில் தினந் தோறும் ஒத்திகை நடத்தி வந்தார். சிலையைக் கண்டதும், அந்தக் கிளி, ராயருடைய பெயரைச் சொல்லி அழைக்கும். உடனே பக்தரானவர், மறைந்து நின்று, ஒரு சூத்திரத்தின் உதவியால் அச்சிலையின் தலையைச் சற்றே கிளியின்பக்கமாய்த் திருப்புவார். கிளி, பாட்டைச் சொல்லும். இப்படியாகப் பல நாள் அவர் கிளியையும் சிலையையும் வைத்து நாடகம் நடத்தினார். இந்த நாடகத்தில் கிளியும் தேர்ச்சி பெற்றுவிட்டது.

ராயர் திருவாரூருக்கு வரும் நாளும் நெருங்கிவிட்டது. வீதிகளெல்லாம் சுத்தம்செய்து, தோரணம் கட்டிப் பூரண கும்பம் வைத்து அலங்கரிக்கப்பட்டன. அவர் வந்த முதல்நாள், காலையில் கோயில் வழிபாடும், மாலையில் நியாய விசாரணையும் செய்ய ஏற்பாடாயிருந்தது. ஏற்பாடுகளெல்லாம் நாகராசக் குருக்கள் மேற்பார்வையிலேயே நடைபெற்றன. அப்படியே, வழிபாடான பின், மாலையில் ஒரு விசேஷ கொலு மண்டபத்தில், மந்திரிகள் முதலாயினோர் புடைசூழ, ராயர் வந்து அமர்ந்தார். எத்தனையோ பேர் வந்து, முறையாகத் தங்கள் குறைகளைச் சொல்லிக்கொண்டார்கள். அவரவர் சொல்லியதை ராயர் பொறுமையாய்க் கேட்டுத் தக்கபடி உத்தரவளித்தார். எல்லோரும் திருப்தியாய்ச் சென்றார்கள். நமது பக்தரும் மற்றவர்களைப்போல, மண்டபத்துக்குள்ளே வர முயன்றார். ஆனால், வாயிற் காவலன் அவரை விடவில்லை. குருக்களுக்கு வேண்டாதவர் எப்படி உள்ளே போகமுடியும்? இந்த நிலைமை அவர் எதிர்பார்த்ததுதானே?

இரண்டாம் நாள், அரசர் தம் பரிவாரங்களோடு வீதியில் நகர் வலம் வருவதாக ஏற்பாடு. முதலிலே சில படைகள் அணி வகுத்துச் சென்றன. பின், முரசு பேரிகை முதலிய வாத்தியங்களும் இன்னிசைக் கருவிகளும் ஒலித்துக்கொண்டு சென்றன. நகர மக்கள் பின்னே வந்தனர். பிறகு, நன்றாய் அலங்கரித்த ஒரு யானையின்மீது ஆரோகணித்து ராயர் வந்தார். இரு புறத்திலும், அவருடைய மந்திரிகள் முதலியோர் குதிரைமீது வந்தார்கள். கடைசியில் மற்றப் படைகள் தொடர்ந்து வந்தன.

இவ்வாறு கோலாகலமாக வந்த ஊர்வலமானது, அகன்ற பல வீதிகளை ஒன்றன்பின் ஒன்ருய்க் கடந்து, குறுகலான ஒரு வீதியிலே, நமது பக்தருடைய வீட்டின் முன்பாகப் போய்க்கொண்டிருந்தது. அவருடைய கிளியோ, வீட்டு உப்பரிகையின் வெளிவிளிம்பிலே ஒரு கூண்டில் இருந்தது. ஊர்வலத்தைப் பார்த்துக்கொண் டிருந்த கிளி, யானைமேல் வந்த ராயரைக் கண்டபோது, அவருடைய உருவம் அதற்குப் பழக்கமான சிலை போலவே தோற்றிற்று. உடனே கிளியானது, தன் பழக்கத்தையொட்டி, 'கிருஷ்ணதேவ ராயா' 'கிருஷ்ண தேவ ராயா' என்று இரண்டு முறை அழைத்தது. இதன் குரல், யானை முதுகில் உயரத்தில் வீற்றிருந்த ராயருக்கு மட்டும் தெளிவாய்க் காதில் விழுந்தது. அவர் திரும்பினர். உடனே கிளியும் தனக்குத் தெரிந்த பாட்டை ஒப்பித்தது. ராயருக்குப் பாட்டு காதில் கேட்டபோதிலும், புரியவில்லை. பெயர்மட்டுந்தான் விளங்கிற்று. கிளி தம்மைக் கூப்பிடுவதன் கருத் தென்னவென்று அறிய அவருக்கு ஆவலுண்டாயிற்று. ஒரு விரலை அசைத்தார். மன்னன் விரலசைந்தால் நாடே அசையுமல்லவா? ஊர்வலம் நின்றது. ஒரு வீரனை அழைத்து, அந்தக் கிளியைக் கொண்டு வருமாறு ராயர் பணித்தார். ஒரு நொடியில் அவன் வீட்டினுள் சென்று, கிளியைக் கூண்டோடு கொண்டுவந்தான். ராயரிடம் வந்ததும், அது முன்போலவே, அவர் பெய ரைச் சொல்லிக் கூப்பிட்டுப் பாட்டையும் பாடிற்று.

ராயர் நல்ல ரசிகர்; சிரிப்புக்கிடமான சந்தர்ப்பத் தில் அதையும் நன்ருய் அனுபவித்துச் சிரிக்கத் தெரிந்த வர். "இக்கிளியின் விவரம் தெரியுமா?" என்று

உடனிருந்தவர்களைக் கேட்டார். ஒருவருக்கும் தெரிய வில்லை. "சரி, கிளியையும் கிளிக்கு உரியவரையும் கொண்டுபோய்க் காவலில் வை; மாலையில் விசாரிப் போம்" என்று கட்டளையிட்டார். ஊர்வலம் மேலே சென்றது. அந்த வீரனும், நமது பக்தரைத் தேடிப் பிடித்து, அவரையும் கிளியையும் கொண்டு போய்ச் சிறையில் வைத்துவிட்டான்.

மாலையில் ராஜசபை கூடிற்று. ராயர் சிம்மாசனத் திலே வீற்றிருக்கிறார். மந்திரிகளும் நகரப் பிரமுகர்கள் முதலானவர்களும் உரிய இடங்களிலே அமர்ந்திருக் கிறார்கள். "கிளியைக் கொண்டுவா" என்று, காலை நிகழ்ச்சியை மறந்து விடாமல் கட்டளையிட்டார் ராயர். வீரனொருவன் போய், கிளியையும் பக்தரையும் கொண்டு வந்தான். வந்தவுடனேயே கிளி தன் பாடத்தை மற்றொரு முறை ஒப்பித்தது!

"கிளி உம்முடையதுதானா?" என்று பக்தரைப் பார்த்து ராயர் கேட்டார்.

"ஆம், மகாராஜா."

"அதைப் பழக்கினது யார்?"

"அடியேன் பழக்கினேன், மகாராஜா!"

"அது பாட்டுப் பாடிற்றே, அது என்னபாட்டு?"

"அது இந்த ஊர் வரலாறு, மகாராஜா!"

"பாட்டை யார் செய்தார்?"

"அடியேன் செய்த பாட்டு, மகாராஜா!"

"பாட்டில் நமது பெயர் வருவானேன்?"

"உத்தரவானால் சொல்லுகிறேன், மகாராஜா!"

"சரி சொல்லும்."

பக்தர் உற்சாகமாய்ப் பாடினார் :

முந்நாள் அறுபத்து
மூவர்இருந் தார் ;அவரில்
இந்நாள் இரண்டுபேர்
ஏகினர் ; - கன்னன்
நறுக்கின்றான் ; விற்றுவிட்ட
நாகரச நம்பி
இருக்கின்றான், க்ருஷ்ணரா யா !

" இன்னொரு முறை இசையோடு தெளிவாய்ப் பாடும். "

பக்தர் சிறிது இசை பயின்றவர். ஆகவே இசையோடு அழகாகப் பாடினார். இசையிலே ஈடுபட்டுச் சிறிது நேரம் பேசாமலிருந்தார் ராயர். தமிழ்ப் பாட்டு அவ்வளவாக அவருக்குப் புரியவில்லை. ஆயினும், பாட்டின் கடைசியிலே தம்முடைய பெயர் வருவது மட்டும் அவருக்குத் தெரிந்தது. பாட்டின் பொருளையும் அறிய எண்ணினார். " இது என்ன விஷயம் ஐயா, விளக்கமாய்ச் சொல்லும் " என்று உத்தரவிட்டார்.

பக்தருக்கு வேறென்ன வேண்டும் ? கதையை ஆரம்பித்தார். திருவாரூர்ப் பெருமையைப் பல தமிழ் நூல்களின் துணையையும் வடமொழி நூல்களின் ஆதாரத்தையும் கொண்டு விளக்கினார். (ராயர் வடமொழியிலே பாண்டித்தியமுடையவர் என்பது அவருக்குத் தெரியும்.) ஆலயத்தின் சிறப்பையும், அறுபத்து மூவர் வரலாற்றையும் உரைத்து, நாகராச நம்பி இரண்டு செப்பு விக்கிரகங்களை விற்று விட்டதையும், கன்னன்

அவற்றை உருக்கியதையும் சொல்லி, கடைசியாக, "விற்றுவிட்ட நம்பி, யாதொரு தண்டனையும் பெருமல் இருப்பது மட்டுமன்றி, இந்த ராஜ சபையிலே அலங் காரமாக அதோ அமர்ந்திருக்கிருர், பாருங்கள்" என்று சுட்டிக்காட்டி முடித்தார்.

எல்லோருடைய கண்களும், ராயரையும், பக்தரை யும், நம்பியையும் மாறி மாறிப் பார்த்தன. ராயர் மிக்க தெய்வபக்தி யுள்ளவர். எந்தக் குற்றம் பொறுத்தாலும் தெய்வ நிந்தை மட்டும் பொறுக்கமாட்டார். அவ ருடைய கண்களிலே கோபத்தணல் வீசிற்று. என்ன செய்வாரோ என்று எல்லோரும் அஞ்சினர்.

சபையிலே பக்தரும் கிளியுமாக வந்தவுடனேயே, நாகராசக் குருக்களுக்குப் பாதி உயிர் போய்விட்டது. உண்மை வெளியாகி விடும் என்று அறிந்துகொண்டார். ராஜசபையானமையால், தாம் அமர்ந்திருந்த சிறப்பான ஸ்தானத்தை விட்டுப் பாதியில் எழுந்து ஓடவும் இயல வில்லை. தவிர, இவ்வளவும் ஆனபிறகு, பொய் சொல் லித் தப்பவும் வழியில்லை. ஆகவே, ராயர் காலில் விழுந்து, "என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

"நீர் குருக்களானமையால், நான் உமக்குத் தண் டனை விதிக்கவில்லை. தெய்வமே உமக்குத் தண்டனை விதிக்கட்டும். ஆனல், நீர் இனி என் நாட்டின் எல்லைக் குள் இருக்கக்கூடாது" என்று ராயர் கட்டளையிட்டார். கன்னனுக்கும் உரிய தண்டனை யளித்தார். பிறகு, பக்தருடைய பக்தியையும் உறுதியையும் அவர் செய்த தந்திரத்தையும் பாராட்டினர்.

விரைவிலேயே ராயர் உத்தரவின்மேல், புதிதாக இரண்டு சிலைகள் செய்து கோயிலிலே பிரதிஷ்டை செய்யப்பட்டன.

பக்தருடைய உள்ளம் குளிர்ந்தது. அடுத்த சில தினங்களில் அடுத்த ஆண்டின் அறுபத்துமூவர் விழா வந்தது. சென்ற ஆண்டு நின்றுபோன விழாவையும் சேர்த்து இவ்வாண்டில் மிக்க சிறப்பாக நடத்தச் செய்தார். அதனிலும் சிறப்பாக அறுபத்துமூவருக்கும் புதிய ஆடைகள் அணிவித்துப் புதிய தீபாவளியே கொண்டாடினர் என்று சொல்ல வேண்டுவதில்லை.

---

மேலே கண்ட பாடல் தமிழ் நாவலர் சரிதையிலுள்ளது. கிருஷ்ணதேவ ராயர் காலம் கி. பி. 1510 - 1530.

# குன்னரங்கன்

[‘போற்றினும் போற்றுவர், பொருள் கொடா விடில் தூற்றினும் தூற்றுவர்’ புலவர்கள் என்பது பழமொழி. போற்றத்தக்க இயல்புகளான கொடை, வீரம், பணிவு, அன்பு முதலியவற்றைக் கண்டால் புலவர்கள் போற்றவே செய்கிருர்கள். அவ்வியல்பு களைக் காணுதவிடத்து அவர்கள் போற்றுவதில்லை என்பதும் உண்மைதான். இகழவேண்டிய சந்தர்ப்பம் வந்தபோது, இகழ்ச்சியிலும் அவர்கள் குறைவு வைப்பதில்லை; மிக்க கொடுமையாகவே தங்கள் இகழ்ச் சியைப் புலப்படுத்துவார்கள். இதை யுணர்ந்தே, ‘போற்றினும் போற்றுவர்’ என்ற பாடலைப் பாடிய வர், ‘கூற்றினும் பாவலர் கொடியர் ஆவரே’ என்று அச்சத்தோடு சொன்னுர். அவர் சொன்ன சொற்கள் எவ்வளவு தூரம் பொருத்தமானவை என்பதைப் பின் வரும் நிகழ்ச்சிகளிலிருந்து தெளிவாக உணரலாம்.]

காட்சி - க

[பதினெட்டாம் நூற்ருண்டின் முற்பகுதி. உத் தேசம் கி. பி. 1735-ஆம் ஆண்டு. இடம்: அரியலூர். மழவர் தலைவனும் சமீன்தாரனுமான குன்னரங்கனது

அரண்மனைவாயில். ஒருநாள் காலை நேரம் ; மணி ஒன்ப திருக்கலாம். அரண்மனைக்குள் செல்ல வந்த சுப்பிரதீபக் கவிராயர், வாயிலருகே வெளிப்புறத்தில் சற்று நிற்கிறார். பாகவதரொருவர், துவாதச நாமங்களும் அணிந்து, வைதிகக் கோலத்துடன் அங்கே வந்து சேருகிறார்.]

கவிராயர் : வரவேணும், வரவேணும், பாகவதர் வாள் ! அடியேன் சுப்பிரதீபன் நமஸ்கரிக்கிறேன்.

பாகவதர் : திர்க்காயுஷ்மான் பவ ! சர்வாபீஷ்ட சித்திரஸ்து ! சர்வ மங்களானி பவந்து !

க : எங்கே தங்களை இந்தப் பக்கமே வெகு நாளாய்க் காணவில்லை ?

பா : நான் ஊரைவிட்டுப் போய்ச் சில மாதங் களாகிவிட்டன. நேற்றுத்தான் திரும்பி வந்தேன்.

க : அப்படியா சமாசாரம் ! எனக்குத் தெரியாதே ! எங்கே போயிருந்தீர்கள் ?

பா : குடும்ப வாழ்க்கை என்றால் விடுகிறதா ? எங் கெங்கேயோ, ஸ்ரீரங்கம் முதலான பல இடங்களுக்குப் போயிருந்தேன்.

க : போகவேண்டியதுதான். பெருமாள் தரிசன மெல்லாம் சௌகரியமாய்க் கிடைத்ததல்லவா ?

பா : தரிசனம் கிடைத்தது, கிடைக்காமலென்ன ?

க : போனது என்ன காரியமோ ?

பா : காரியமா ?......முக்கியமான காரியமொன்று இருந்தது வாஸ்தவந்தான். அது......

க : அது என்னவோ ?

பா : இனிமேல் சொல்லி என்ன பயன்?......நான் புண்ணியம் பண்ணவில்லை, பலனுமில்லை......

க : என்ன, தாங்கள் ஏதோ வருத்தப்படுவதாகத் தெரிகிறதே! முடியுமானல், தங்கள் வருத்தத்தை நான் போக்கிவிடுகிறேன். சொல்லுங்கள்.

பா : சொல்லாமலென்ன? உங்களை அரண்மனை வாயிலில் கண்டவுடனே என் கலியெல்லாம் பறந்தோடி விட்டதென்றே துணிந்துவிட்டேன். தாங்கள் சுப்பிர தீபமல்லவா? கூர்மையான அறிவு படைத்தவராயிற்றே! எனக்கு ஏதாவது வழிகாட்டுவீர்கள்.

க : எதற்கு வழிகாட்டவேண்டும்? உங்களுடைய கலி என்னவென்பதைச் சொல்லவில்லையே!

பா : கலியெல்லாம் என்ன? வேறொன்றுமில்லை. பொருளில்லாத கலிதான். வருகிற தை மாதம் என் மகளுக்குக் கலியாணம் நிச்சயமாகி யிருக்கிறது. அதை நடத்திவைப்பதற்குச் சிறிதும் என்னிடம் பொருளில்லை.

க : அப்படியானல் என்ன செய்தீர்கள்?

பா : செய்வதென்ன இருக்கிறது! இந்தக் கலி காலத்திலே திருவரங்கப் பெருமான்தான் கண்கண்ட தெய்வமாயிற்றே! லக்ஷ்மியையே எந்நேரமும் மார்பில் வைத்திருப்பவனல்லவா? அவனிடம் போய் முறையிடுவோம் என்று போனேன்.

க : பேஷ், அப்படியா சமாசாரம்? என்னவோ பெருமாளை வழிபடத்தான் பக்தியோடு போனீர்களாக்கும் என்றெண்ணினேன்.

பா : ஆம், வழிபடத்தான். வழிபட்டு நம் குறையைச் சொல்லிக் கொள்ள.

க : வழிபடலாமே யொழிய, குறையைச் சொல்லிக்கொள்ள என்ன இருக்கிறது? அரங்கா, திருவரங்கா, தென்னரங்கா என்றெல்லாம் கூவி அரற்றினீர்களே, அத்தனைக்கும் அந்தத் திருவரங்கன் ஏதாவது வாய் திறந்து ஒரு வார்த்தை சொன்னானா ?

பா : ம்......இல்லை.

க : சுகமாக ஆதிசேஷன்மீது தூங்கிக்கொண்டிருக்கிறானே அந்த அரங்கன், உங்கள் குறையைக் கேட்டானா ? உங்களைத் திரும்பியாவது பார்த்தானா, கண்ணையாவது திறந்தானா ?

பா : ஆமாம். திறக்கவில்லை என்பது உண்மைதான். ஆனாலும்......

க : அப்புறம் என்னஐயா, 'ஆனாலும்' ? கடவுளைப் போய்க் கும்பிடலாம். வேறு நமக்குக் கடவுள் ஏதாவது உதவி செய்வார் என்று எதிர்பார்க்க என்ன இருக்கிறது ?

பா : அப்படிச் சொல்லக்கூடாது கவிராயர்வாள். அரங்கன் சித்தம் என்னவோ, நாம் எப்படி அறிவோம் ?

க : அறிய என்ன ஐயா இருக்கிறது ? அவன் இரங்கினால்தான் உமக்குப் பொருள் கிடைத்திருக்குமே ! ஏழைகளுக்கு அவன் இரங்கமாட்டான். உம் பக்கத்திலேயே உம்மைப்போல எத்தனை பேர் அரங்கா அரங்கா என்று கதறினார்கள் ? யாருக்காவது வாய் திறந்து ஒரு வார்த்தை பேசினானா ? அவனிடத்தில் கருணையாவது, இரக்கமாவது, ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது. லக்ஷ்மியோடு கூடி வாழ்பவனுக்கு ஏழையின் வருத்தம் தெரியுமா ?

பா : ஐயோ ! அப்படியானல் நான் என்ன செய்வேன் ? இந்த உலகத்திலே எனக்கு வேறு புகல் ஏது !

க : புகல் இல்லாமலா போய்விட்டது ? தெய்வம் உதவி செய்யவில்லை என்று கவலைப்படாதீர்கள். மனிதர்களிலே தெய்வம் உண்டு, மனிதன் உங்கள் கவலையைப் போக்குவான்.

பா : மனிதரில் தெய்வமா ? அப்படியும் உண்டா ? மனிதன் என் கவலையைப் போக்குவானு ? அப்படி யார் இருக்கிருர்கள் ? யாரிடத்தில் நான் போவேன் ?

க : அந்தத் தெய்வரங்கனை விட்டீர்களானுல், உங்களுக்கு உதவிசெய்ய இதோ இங்கே மனித ரங்கன் இருக்கிறன். நமது மழவர்குலத் தோன்றலான மழவரங்கனுடைய புதல்வன், தமிழிலே உயிராயுள்ளவனை குன்னரங்கன் இருக்கிருன். இவன் ரங்கனுக்கெல்லாம் மன்னனுன மன்னரங்கன். இவன் உங்களுக்கு வேண்டிய உதவி செய்வான்.

பா : செய்வானு ? குன்னரங்க மன்னன் அருள்செய்வானு ? அவனிடம் போய் நான் எப்படிக் கேட்பேன் ! தெய்வமே ஏழைக்குக் கருணை செய்யாதபோது, மனிதனைப் போய் நான் என்ன சொல்லிக் கேட்பேன் ?

க : ஒன்றும் சொல்லவேண்டாம். குன்னரங்கா, எனக்கு அருள்செய், என் தமிழுக்கு இரங்கிக் கருணை புரியவேண்டும் என்று கேட்டு ஒரு பாட்டுப் பாடுங்கள், தமிழிலே பாடுங்கள், அதுவே போதும் :

**தென்னரங்கன் அரங்கனென்பார்,**
**வாய்திறவான், கண்விழியான்,**
**திரும்பிப் பாரான் ;**

என்னரங்கன் ? தூங்கிரங்கன்,
ஏழையர்பாற் கருணையுடன்
இரங்கா ரங்கன்.

அந்த அரங்கநாதனைப்போலல்ல. இவன் இவனைக்கண்டு,

மன்னரங்கன், தமிழ்ப்பெருமான்,
மழவரங்கன் அளித்தருளும்
மைந்தனுன
குன்னரங்கா! எனக்கிரங்காய்,
குழைந்தெழுந்த தமிழ்க்கிரங்கிக்
குழைந்தெழாயே!

என்று பாடுங்கள். உங்களுக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கும்.

பா: அப்படியா! என் நன்றியை உங்களுக்கு எப்படித் தெரிவிப்பேன்!... நீங்கள் சொன்னபடியே போய்க் குன்னரங்கனைப் பிரார்த்திக்கிறேன்.

## காட்சி - உ

[முந்திய காட்சிக்கும் இதற்கும் இடையிலே இருபது ஆண்டுகள் கழிந்துவிட்டன. குன்னரங்கனுடைய மகன், ஒப்பிலா மழவராயன் இப்போது மழவர் தலைவனுயிருக்கிறுன். யாது காரணம்பற்றியோ இவனுக்கும் இவன் தந்தை குன்னரங்கனுக்கும் கொடிய பகைமை ஏற்பட்டிருக்கிறது. குன்னரங்கன், அயலூரிலுள்ள சிறு கோட்டையொன்றில் தன் படைகளோடு தங்கியிருக்கிறுன். ஒப்பிலா மழவராயன் அரியலூர்க் கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டான். மகனுக்கும் தந்தைக்குமிடையில் பல போர்கள் நிகழ்ந்தன.

வெற்றி பெரும்பாலும் மகன் பக்கந்தான். குன்னரங்கன் மனம் நொந்து சமாதானத்துக்கு வழிதேடுகிறுன்.

இக்காட்சி நிகழும் இடமும், பழைய இடந்தான் : அரியலூர் அரண்மனைவாயில் வெளிப்புறம். நேரமும் காலை நேரம், மணி ஒன்பதிருக்கும். சுப்பிரதீபக் கவிராயர் வருகிறுர். நரைத்த தலை. முதியகோலம். கண் பார்வையும் சிறிது மங்கல். அரண்மனைக்குள் செல்லும் தருணம் : முன்னமே நாம் பார்த்த அதே பாகவதர். தளர்ந்த நடையோடு, ஓடோடியும் வருகிறுர்.]

பாகவதர் : என்ன கவிராயர்வாள், செளக்கியந் தானே? தங்களைக் காணத்தான் இவ்வளவு வேகமாய் ஓடி வருகிறேன். எங்கும் போய்த் தேடாமல் அரண்மனை வாயிலிலேயே பார்க்கக் கிடைத்தது எவ்வளவோ நல்லதாய்ப் போயிற்று.

கவிராயர் : யாரது...? தெரியவில்லையே...எனக்கு இப்போது கண்பார்வை கொஞ்சம் மங்கல். சற்று அருகில் வாருங்கள்.

பா : நான்தான், தங்கள் நண்பன், வேங்கடேசுவர பாகவதன். மறந்து போயிருக்கமாட்டீர்கள்.

க : பாகவதர்வாளா? நமஸ்காரம், நமஸ்காரம் : மறக்கவாவது? நன்ருய்ச் சொன்னீர்கள். தங்கள் பெண்ணும் மாப்பிள்ளையும் நலந்தானு? குழந்தை குட்டிகள் எல்லாம்...குடும்பம் பெருகியிருக்குமே !

பா : ஆமாம். வெகு காலமாயிற்று......தாங்கள் எனக்குச் செய்த பேருதவியை நான் மறக்க முடியுமா ? நம்முடைய ராஜாவிடம் சொல்லி எனக்கு அளவற்ற

பொருளுதவி செய்து என் புதல்வி கலியாணத்தை யெல்லாம் சிறப்பாய் நடத்திவைத்த தங்கள் கருணைக்கு நான் என்ன கைம்மாறு செய்யவல்லேன்!

க: நான் என்ன செய்துவிட்டேன்? என்னமோ அந்தத் காலம் அப்படி நடந்தது......அது ஒருகாலம், இது ஒரு காலம்.

பா: தாங்கள் அப்படிச் சொல்லலாமா? தங்களைப் போன்ற கல்வியும் அறிவும் கவித் திறமையும் பெற்ற வித்துவான்களால்தானே சமஸ்தானங்கள் நடைபெறு கின்றன. தாங்கள் மனம் வைத்தால் ஆகாததும் உண்டா? தாங்கள் அறியாத விஷயமா, நான் சொல் லவா வேண்டும்?

க: தாங்கள் சொல்வது என்னவென்று எனக்கு விளங்கவில்லையே! விவரமாய்ச் சொல்லுங்கள்.

பா: நம்முடைய மகாராஜா இருக்கிறாரல்லவா?

க: ஆம், இருக்கிறார். அவரைப் பார்க்கத்தான் நான் போகிறேன். வாருங்கள், போவோம்.

பா: இல்லை, இல்லை, இவரைச் சொல்லவில்லை. பெரிய மகாராஜா இருக்கிறாரல்லவா, குன்னரங்கர் ...?

க: ஓ, அப்படியா சமாசாரம்? அதையெல்லாம் விட்டுத் தொலையுங்கள், ஐயா! மகாராஜாவிலே பெரிய வரென்றும் சின்னவரென்றும் கிடையாது. இப்போது ஒரே மகாராஜாதான். அவர் ஒப்பிலா மழவராயர்.

பா: குன்னரங்க மகாராஜா தங்களைப் பார்க்க வேண்டுமென்று பெரிதும் விரும்புகிறார்கள்.

க: என்ன காரியமாம்?

பா: எல்லாம் தங்களுக்குத் தெரிந்ததுதான்: இளைய மகாராஜாவிடம் சொல்லி எப்படியாவது சமாதானம் பண்ணிவைத்து, நாட்டில் ஒரு பகுதியைக் கொடுத்தால் போதும் என்று எண்ணுகிறார்கள்.

க: நாடாவது, பகுதியாவது! அதெல்லாம் சிறிதும் நடவாத காரியம். மழவராயரா கொடுப்பார்?

பா: தாங்கள்தான் கருணை புரியவேண்டும். பெரிய மகாராஜாவிடம் தாங்கள் ஆஸ்தான வித்துவானாயிருந்தவர்களாயிற்றே! தங்களுக்குத் தெரியாததை நான் என்ன சொல்லக்கூடும்? குன்னரங்கரும் தங்களுக்கு எவ்வளவோ வேண்டியவரல்லவா?

க: ஆமாமையா, எல்லாம் உண்மைதான். நான் தான் முன்னமே சொன்னேனே. அது ஒரு காலம், இது ஒரு காலம். மகாராஜா இரண்டு பேருக்கு இங்கே இடமில்லை. இளையவர் இப்படிப் பிடிவாதம் பிடிக்கும் போது, தகப்பனார் விட்டுக்கொடுக்க வேண்டியதுதான்.

பா: தாங்கள் பார்த்து எப்படிச் சொன்னாலும் சரிதான். சொல்லுங்கள். ஏதோ சில ஊர்களும் ஒரு கோட்டையும் கொடுத்தால் போதுமென்று குன்னரங்கர் கேட்கச் சொன்னார்.

க: ஊரா, கோட்டையா? பேஷ்......சரி, நான் ஒரு நாட்டைக் காட்டுகிறேன். அங்கேபோய் அரசாளச் சொல்லுங்கள். வயதான காலத்தில் இங்கே ஏன் தொந்தரவு, பாவம்!...என்ன, சம்மதந்தானே?

பா: தங்கள் அபிப்பிராயம். சம்மதம் இல்லாமலென்ன? நாடு எது சொல்லுங்கள், இப்படியே திரும்பிப் போய்ச் சொல்லுகிறேன்.

க: சொல்லுகிறேன். அமைதியாய்க் கேளுங்கள் : (பாடுகிருர்.)

எண்டிசையும் புகழ்படைத்த
குன்னரங்க மகிபாலா !

பா: அடாடா! என்ன வாக்கு, என்ன வாக்கு! தெரியாமலா தங்களைக் குன்னரங்க மகாராஜா ஆஸ்தான வித்துவானுக்கினுர்! பெரிய மகாராஜாமீது தங்களுக்கு உண்மையிலே எவ்வளவு விசுவாசம்!

க: கேளுமையா முழுவதையும்! (பாடுகிருர்.)

இனிமேல் இந்த
மண்தலத்தை அரசாள
ஒப்பிலா நின்புதல்வன்
மழுவன் போதும் !

பா: (இடைமறித்து) ஓகோ! இந்த அரியலூர் ராஜ்யம் வேண்டாமென்று சொல்கிறீர்களோ? அப்படி யானுல் வேறெதைக் கொடுப்பதாக இளைய மகாராஜா உத்தேசமோ? அதையும் விவரமாய்த் தெரிவியுங்கள்.

க: அதைத்தான் சொல்ல வருகிறேன். இன்ெெருரு நாடு இருக்கிறது. அங்கே அரசனில்லாமல் எல்லாம் அல்லோல கல்லோலமாகி, கேட்பாரற்று, நண்டளந்த நாழியாய்க் கிடக்கிறதாம். அங்கே போகச் சொல்லுமையா, உங்கள் குன்னரங்கரை.

பா; ஆ, அப்படியா! எங்கள் குன்னரங்கருக்கு ஒரு ராஜ்யமே கொடுக்கிருரா இளைய மகாராஜா! அடாடா, இவருடைய கருணையை என்னவென்று புகழ்வேன்!... அந்த நாடு எது என்பதையும் தாங்களே தயைகூர்ந்து சொல்ல வேண்டும்.

க: மறுபடியும் சொல்லுகிறேன். கேட்டு வாரும். (பாடுகிருர்.)

எண்டிசையும் புகழ்படைத்த
குன்னரங்க மகிபாலா!
இனிமேல் இந்த
மண்தலத்தை அரசாள
ஒப்பிலா நின்புதல்வன்
மழவன் போதும்!

குன்னரங்க மகாராஜா பூலோகத்தில் ஆண்டதுபோதும். இனிமேல் இங்கே மழவராயர் ஆளட்டும். தேவலோகத்தில் கொஞ்ச நாளாக இந்திரனில்லாமல் சொர்க்க லோகமே தலைகீழாகி, எல்லாம் நண்டளந்த நாழியாய்ப் போய்விட்டது. ஆகவே, குன்னரங்கரை......

பா: சொர்க்கலோகமா?...அப்படியானுல், இறந்து போகவா சொல்கிறீர்கள்? தேவலோகமென்ருல் அப்படித்தானே...?

க: ஆமாமையா, ஆமாம்: (பாடுகிருர்.)

விண்தலத்தில் இந்திரனுக்கு
அரசு நிலைமை யில்லாமல்
வெகு நாளாக
நண்டளந்த நாழியாய்க்
கிடப்பதால் விண்ணுள
நடந்திடாயே!

என்று போய்ச் சொல்லுங்கள், ஐயா!

பா: விண்ணுளவா போகச் சொல்லுகிறீர்கள்! குன்னரங்க மகாராஜாவையா இப்படிச் சொல்லுகிறீர்கள்! அதுவும், அவருடைய ஆஸ்தான வித்துவானுயிருந்த கவிராயரான தாங்களா இப்படிச் சொல்கிறவர்? அடடா! அப்படியே மூர்ச்சையுற்றுக் கீழே விழுகிருர்.)

## படிப்பு எதற்காக ?

சரஸ்வதி பூசை நம் வீடுகளில் ஆண்டு தவருமல் நடந்து வருகிறது. விசய தசமியன்று சிறு குழந்தைகளை முதன்முதலாகப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிருேம். நல்ல காரியந்தான். படிப்புக்கு இவ்வளவு பூசையும் மரியாதையும் செய்வது பாராட்டத்தக்கதுதான்.

ஆனல் இந்தப் படிப்பு எதற்கு? இதன் லட்சியம் என்ன ? இதுபற்றிய திட்டமான கருத்து நமக்கு இருக்கிறதா ? இங்கேதான் சங்கடமெல்லாம் வருகிறது. முதலிலே குழந்தையைப் பார்த்துக் கேட்போம். குழந்தை என்ன சொல்கிறது ?

"எங்கள் அப்பா பள்ளிக்கூடம் போகச் சொன்னர், போகிறேன்" என்கிருன், ஒன்றுந் தெரியாத சிறுவன்.

கொஞ்சம் விவரம் தெரிந்த பையன் என்ன சொல்கிருன் ? "படித்துப் பெரியவனுனல், உத்தியோகத்துக்குப் போவேன். நிறையச் சம்பாதிப்பேன். அதை உத்தேசித்துத்தான் இப்போது படிக்கிறேன்" என்கிருன். ஏதோ உத்தியோகத்துக்குப் போவதும் நாலு பணம் சம்பாதிப்பதுமே வாழ்க்கையின் லட்சியம்,

படிப்பின் லட்சியம் என்று சின்னஞ்சிறு பையன் எண்ணும்படி நாம் செய்துவிட்டோம். அவன்மீது பிழையொன்றுமில்லை.

இன்னும் சிறிது வினவு தெரிந்த பையனைக் கேட்டாலும் இப்படித்தான். இவனுக்கு முதலில் ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. பிறகு தன் கருத்தை நம்மிடம் அந்தரங்கமாக வெளியிடுகிறான். "இந்தக் காலத்தில் படிக்காவிட்டால் யார் மதிக்கிறார்கள்? படிக்கவில்லையென்றால், கலியாணத்துக்குப் பெண்ணும் கிடைப்பதில்லை. கொஞ்சமாவது படித்துப் பட்டம் பெற்றுவிட்டால், கலியாணம் எளிதில் நடக்கும். பணக்காரப் பெண்ணாகத் தேர்ந்தெடுக்கலாம்; சீரும் வரிசையும் நிறைய வருமல்லவா?" என்கிறான்.

படிப்புக்கு எவ்வளவு மேலான நோக்கம்!

இந்த நோக்கங்களெல்லாம் இந்தப் பிள்ளைகளுக்குச் சொந்தமாக ஏற்பட்டனவா? அல்ல. வீட்டிலுள்ள பெற்றோரும் பெரியோரும் சொல்கிறார்கள்: "பையன் நாலெழுத்துப் படித்திருந்தால், ஏதாவது ஒரு வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கலாம். சம்பாதிக்கா விட்டாலும், பெரிய இடமாய்ப் பார்த்துக் கலியாணம் பண்ணலாம். கலியாணத்துக்குப் பிறகு வேலையிலமர்த்துவதும் சௌகரியமா யிருக்கும்" என்கிறார்கள். இதைக் கேட்டுக்கொண்டிருக்கிற பிள்ளைகள் இதே நோக்கங் கொண்டிருப்பதில் வியப்பென்ன?

படிப்பிற்கு இன்னும் எத்தனையோ நோக்கங்கள்: பிரசங்க மேடையிலே ஏறி நின்று பிறர் மெச்சும் முறையிலே பேசவேண்டுமென்ற எண்ணத்தோடு எவ்

வளவோ பேர் படிக்கிருர்கள். வேறு சிலர், மற்ற வர்கள் பேசுவதிலும் எழுதுவதிலும் குற்றங் காண வேண்டும் என்ற ஒரே எண்ணத்தோடு படிக்கிருர்கள். உபாத்தியாயரை ஏமாற்றவேண்டும், பல நூல்களி லிருந்து அங்கொரு வாக்கியம் இங்கொரு தொடராக எடுத்தெழுதி அவரைத் திணறச் செய்து பரீட்சையில் மார்க்கு வாங்கவேண்டும் என்று படிக்கிற பிள்ளைகள் தொகையைச் சொல்லவே வேண்டாம்.

இவற்ருேடு ஒட்டிய படிப்பு ஒன்று முற்காலத்தி லும் இருந்தது. ஏதோ இரண்டொரு நூல்கள் படிக்க வேண்டியது; பிறகு செல்வர் மீது பாட்டுப்பாடி, அவர் களிடம் பொருள் பெற்று வாழ்க்கை நடத்தவேண்டி யது என்ற எண்ணத்தோடு மட்டும் படித்த 'செந் தமிழ்ப் பாவலர்' முற்காலத்திலே அனேகர். 'கன்ன, பின்ன, காமா, சோமா' என்று ஒருவனைப் பாடிப் பிழைக்க இவர்கள் கற்றிருந்தார்கள்.

சாமானியமான இந்தச் செந்தமிழ்ப் பாவலர் வாழ்க்கை நடத்திய காலத்திலே, நிரம்பக் கற்றவர்களு மிருந்தார்கள். அவர்களுடைய படிப்பு அவர்களுக்கு எவ்வழியிலே உதவிற்று? பிறர் கவியிலே குற்றங் கூறும் ஆற்றலைத்தான் அவர்களுக்கு உதவிற்று. அவர் களைப் பற்றியும் எவ்வளவோ கதைகளை நாம் அறி வோம். பாவம், ஏழைப் புலவர் பாடிவந்த பாடல் களிலே குற்றங்கூறி, அவருக்கு வரவிருந்த பரிசுகளை நிறுத்தியவர் பலர். அன்றியும், அக் குற்றங்களுக்காகப் புலவர் தலையிலே குட்டுவதற்கும், அவர் காதைக் குடைந்து தோண்டி அறுப்பதற்கும், தலையை வெட்டு வதற்கும் துணிந்த 'அறிஞர்'களுக்குக் குறைவில்லை.

பிள்ளைப்பாண்டியனும், வில்லிபுத்தூராரும், ஒட்டக் கூத்தரும் எத்தனை எத்தனையோ பேர்:

இப்படிக் குற்றங்காணுந் திறமை வாய்ந்த படிப் பாளிகளிலே தலைசிறந்தவரா யிருந்தார், நக்கீரர். பாண்டியன் ஒருசமயம், தன் மனத்திலிருந்த கருத்தைப் பாட்டிலே வெளியிடவல்ல புலவனுக்கு நிறையப் பொன் தருவதாகச் சொல்லி, ஒரு பொற்கிழி கட்டிவைத்தா னும். மிக்க எளியவனும் பக்தனுமான தருமி என்ற அந்தணன்மீது கருணைகொண்டு, சிவபெருமான், அப் பாண்டியன் கருத்தை ஒரு பாடலாக எழுதி அவ்வந்தண னிடம் அளித்துப் பொன்னைப் பெற்றுக் கொள்ளும்படி சொன்னார். தருமிகாட்டிய பாடலை ஏற்று, பாண்டியன் பொன்னைக் கொடுத்துவிட்டான். இதைக் கேட்டார் நக்கீரர்; படிப்பிலே பெரியவரல்லவா அவர்? "கொண்டு வா, பாடலை" என்றார். பாடலைப் பார்த்தார். குற்றஞ் சொல்லவா தெரியாது அவருக்கு? சொன்னார்: "சிவ பெருமானே தந்த பாடல்" என்று தருமி கொஞ்சம் பெருமையோடு சொல்லியும் பார்த்தான். நக்கீரரிடம் பலிக்கவில்லை. சிவபெருமானுகத்தான் இருக்கட்டும், இன்னும் எந்தப் பெருமானுகத்தான் இருக்கட்டும், குற்றம் குற்றம்தான் என்று சாதித்து விட்டார் நக்கீரர். (இவ்வளவும் கதைதான். நக்கீரர், வில்லி புத்தூரர் முதலியவர்களைப் பற்றிய இப்படிப்பட்ட கதைகள் உண்மையாகவு மிருக்கலாம், அன்றிப் பொய் யாகப் போயினும் போகலாம்.)

இப்படியாக, படிப்பிலே சாரமில்லாமற் போனது மாத்திரமின்றி, பிறர் படிப்பையும் சாரமில்லாமற் போகச் செய்வதே நக்கீரர் போன்ற புலவர் கதைகள்

தோன்றிய காலத்திலே ஓர் அரிய வித்தையாக இருந்து வந்தது. அந்த வித்தையில் தேர்ந்த புலவர்கள் பண்டிதர்கள் பலர்; பண்டிதரல்லாதோர் சிலரும் அதில் தேர்ந்திருந்தார்கள்.

இவ்விதம் தேர்ந்தவர்களிலே சிற்றரசனொருவன் இருந்தான். தமிழ் நாட்டின் வடபகுதியிலே எங்கோ ஒரு மூலையில் வாழ்ந்து வந்தான். இவனுக்கு நல்ல ஞாபக சக்தியுண்டு. ஒருமுறை காதால் கேட்ட பாடல் எதையும் நினைவு வைத்திருந்து, கேட்டபடியே திருப்பிச் சொல்லும் ஆற்றல் இவனுக்கு வாய்த்திருந்தது. புலவர் பலர் - யாராவது ஒரு வள்ளலைத் தேடி வந்து அவன்மீது ஏதோ இரண்டு பாட்டுப் பாடி, அவன் கொடுத்த பொருளைக்கொண்டு வயிறு வளர்க்கும் புலவர்கள் - வருவார்கள். அவர்கள் பாடலைக் கேட்குமுன், இவ்வரசன் ஒரே ஒரு நிபந்தனை சொல்வான்: "உங்கள் பாடல் சொந்தப் பாடலா யிருக்கவேண்டும்; அதாவது புதிதாக நீங்கள் பாடியதா யிருக்கவேண்டும்" என்பான். புலவர் ஒப்புக்கொண்டு பெரிதும் முயன்று ஒரு பாடலை இயற்றிக்கொண்டு வருவார். அரச சபையிலே பாடலை எடுத்துச் சொல்லி விளக்கத் தொடங்குவார்.

ஆனால் அவர் பாடலைச் சொன்னவுடனே, அரசன் குறுக்கிடுவான். அவனுக்குத்தான் அப்பாடலை ஒரு தடவை கேட்டவுடனே மனப்பாடமாகி யிருக்குமே! "ஐயா, உங்கள் பாடல் சொந்தப் பாடல் அன்று; எல்லோருக்கும் தெரிந்த பாடல்; வேண்டுமானால் நான் சொல்லுகிறேன், கேளுங்கள்" என்று கூறிவிட்டுப் பாடலைப் பிழையின்றிச் சொல்வான். புலவர் என்ன செய்வார்? பாவம், ஏமாந்து விழிப்பார்.

அரசனே விடமாட்டான். "என் மந்திரியையும் என் அரண்மனைச் சேடியையும் சொல்லச் செய்கிறேன் கேளுங்கள்" என்று கூறிவிட்டு, பாட்டைச் சொல்லு மாறு மந்திரிக்குக் கட்டளையிடுவான். இவ்வரசனுக் கேற்றாற்போல, மந்திரியும் அந்தப்புரச் சேடியொருத்தி யும் வாய்த்திருந்தார்கள். இரண்டுமுறை ஒரு பாட் டைக் காதால் கேட்டுவிட்டால், மந்திரி அதைத் திருப் பிச் சொல்லிவிடுவான். மூன்றுமுறை கேட்ட பாட்டை அச் சேடி சொல்லிவிடுவாள். ஆகவே, அரசன் கட் டளையிட்டவுடனே, புலவன் சொல்லியதையும் அரசன் சொல்லியதையும் கேட்டுக் கொண்டிருந்த மந்திரி, அப் பாட்டை எளிதாகச் சொல்லிவிடுவான். இவன் சொல்லியதையும் கேட்டுக்கொண்டிருந்த சேடி, தானும் அதை ஒப்புவிப்பாள். இவ்வளவையும் அரசன் புலவருக் குக் காட்டி, அவர் பாடிய பாடல் புதுப்பாடலன்று, பழம் பாடல்தான் என்று நிரூபித்து விடுவான். புலவர் இதற்கு மேலும் என்ன செய்வார்? வந்த வழியே வெறுங் கையோடு திரும்புவார்.

இப்படியாக இவ்வரசன் படித்த படிப்பெல்லாம், தன்னை நாடி வந்த ஏழைப் புலவருக்கு 'இல்லை' என்று திறமையாகச் சொல்லத்தான் கற்றுக்கொடுத்தது.

இவனிடம் பரிசில் பெற எண்ணி வந்து ஏமாந்து சென்ற புலவர் பலர். சோழ நாட்டிலுள்ள மிழலை என்ற ஊரிலிருந்த புலவரொருவர், வடக்கே காசி கயிலை எல்லாம் யாத்திரைசெய்து திரும்பி, காளத்தி திருவேங் கடம் முதலிய தலங்களைத் தரிசித்துவிட்டு, இவ்வரசனை வந்து கண்டார். இவருக்கும் மற்றப் புலவர்களுடைய கதிதான் நேர்ந்தது. அரசன் வழக்கம்போலவே

ஏளனம் செய்து அனுப்பிவிட்டான். பரிசிலுக்காக வென்று இவர் போகாவிட்டாலும், தம்மை அவ்வரசன் மதிக்காதபடி அவமானப்படுத்தியது இவருக்கு மிக்க வருத்தத்தைத் தந்தது.

அப்போது அவர் எண்ணலானுர். "நாம் எதன் பொருட்டுப் படித்தோம்? கேவலம் இத்தகைய அற் பரை யடுத்துப் பிழைக்கவா நாம் படித்த படிப்பு? தல யாத்திரை செய்து மீண்டபோது இவனைப் போய்ப் பார்த்ததும் இவனைப் புகழ்ந்து பாடியதும் வேண்டாத காரியங்களல்லவா? கல்வி கற்றதன் பயன், கற்றபடி நடக்கவேண்டும். கற்பவற்றைக் கசடறக் கற்று, கற்ற வற்றுக்குத் தக்கவாறு நிற்பதல்லவா அறிவுடையவ னுக்கு அழகு? தொழுவதானுல் பரம்பொருள் ஒன்றைத் தொழுவதே கற்றதனுலாய பயன். மேலும், கல்வி யானது அறிவு விளக்கமல்லவா தரவேண்டும்? இவ் வுணர்ச்சியின்றி ஒருவனிடம் போய்க் கையேந்தி இரந்து நின்ருேமே!" என்றெல்லாம் எண்ணி அவர் மனம் மிகவும் நொந்து போயிற்று.

தம்மூர் வந்து சேர்ந்தார். மிழலையிலே கோயில் கொண்டுள்ள பெருமானை வழிபட்டுத் திருப்தியோடு வாழலானுர். தம்முடைய சொந்த ஊராகிய மிழலையி லுள்ள வள்ளல்களின் கல்வியும் கல்விக்குரிய நடத்தை யும் கொடையும் அவர் நினைக்காமலிருக்க முடிய வில்லை. இடையே தம்மை அவமானப்படுத்திய சிற்றர சன் செயலும் அவன் சிறுமையும் அவர் மனத்திலே தோன்றும்.

நாட்கள் பல சென்றன. அவ்வரசன் ஒரு சமயம் தல யாத்திரையாகப் புறப்பட்டுத் தென்னுடு வந்தான்.

பல தலங்களுக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு, அடியார்கள் பொருட்டு அற்புதங்கள் நிகழ்ந்த பெருமையுடைய மிழலையை யடைந்தான். பிற நாட்டு அரசன் என்றமையாலே, அவ்வூர்ப் பெரிய வர்கள் ஒன்றுகூடி அவனை எதிர்கொண்டு வரவேற்று, கோயிலுக்கு அழைத்துச் சென்று சுவாமி தரிசனஞ் செய்வித்து உபசரித்தார்கள். அவனுக்காக ஆடலும் பாடலும் சிறப்பாக நடைபெற்றன.

உபசாரங்கள் நடந்த மண்டபத்திலே, நாம் மேலே பார்த்த மிழலைப் புலவரும் இருந்தார். இவ்வரசனைத் தாம் முன்னமே கண்டதும் அவன் அற்பத்தனமாக நடந்துகொண்டதும் அவருக்கு நினைவு வந்தன.

அரசனைப் புகழ்ந்து அவ்வூரிலுள்ள 'செந்தமிழ்ப் பாவலர்' வாழ்த்துப் பாடல் பாடினார்கள். அயலூ ரானமையாலே, அவனும் தன் திறமையையெல்லாம் நிறுத்திக்கொண்டு பாடல்களைக் கேட்டு வந்தான். நம் முடைய மிழலைப் புலவர் பாடவேண்டிய முறை வந்தது. சபையிலே இருந்துகொண்டு, பாடமாட் டேன் என்று கூறுவது நாகரிகமன்று. ஆகவே, அவர் பாடுவதற்கு இசைய வேண்டியவரானார். ஆயினும், அவ்வரசன்மீது செய்யுளியற்ற அவருக்கு நா எழவில்லை. சிறிது நேரம் சிந்தனை செய்தார். செய்து, "நம் நாட் டினர்மீதே பாடுவோம் : மிழலை நாட்டார் பெருமையை இவனுக்கு உணர்த்தி, தன் சிறுமையை எண்ணி இவன் வெட்கமடையும்படி செய்வோம்" என்று தம் மனத் துள் முடிவு செய்தார்.

அச்சிற்றரசனுடைய அறியாமையை முதலாவ தாகச் சுட்டிக் காட்டினார் : ஏதோ, ஒருவரை அடுத்துப்

பிழைப்போம் என்று வருகின்ற சாதாரணப் புலவர் களைத் தடுத்துப் பேசி அவமதிப்பது கல்விக்கு அழகாகாது.

அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப்
பாவலர் ஆரினையும்
தடுக்கப் படிக்கின்ற கல்விகல்லார் ;

மிழலை நாட்டினர் இப்படிப்பட்ட கல்வி கற்கமாட் கள். பின், கொடுக்கக் கற்பார்களா ? மாட்டார்கள் : இக்கல்வியும் அவர்களுக்கு வேண்டுவதன்று. ஏன் ? மேகத்துக்கு மழை பெய்வது எப்படி இயல்பா யமைந்த பண்போ, அதேபோல, கொடை வழங்குகின்ற பண்பும் இவர்களுக்கு இயல்பாய் வந்து பொருந்தி யிருக்கிறது ; கல்வி கற்று அதன் பயனாக வருகிற பண்பன்று, இவர்க ளுடைய கொடைத்திறம் :

இந்தத் தாரணியில்
கொடுக்கப் படிக்கின்ற கல்விநன்
ருய்வந்து கூடியபின் ; -

'சரி, அப்படியானால் இவர்களுக்கு வேறு எதுவும் வேண்டுவதில்லையே, இன்னுமா கற்கிறார்கள் ?' என்ற கேள்வி எழலாம். ஆம், இவர்கள் இன்னும் கற்கத் தான் கற்கிறார்கள். எதற்காகக் கற்கிறார்கள் ? கற்றபடி நடப்பதற்காகக் கல்வி கற்கிறார்கள், மிழலை நாட்டார்,

அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப்
பாவலர் ஆரினையும்
தடுக்கப் படிக்கின்ற கல்விகல்
லார் ;இந்தத் தாரணியில்

கொடுக்கப் படிக்கின்ற கல்விநன்
றுய்வந்து கூடியபின்,
நடக்கப் படிக்கின்ற நாட்டார்
மிழலை நராதிபரே !

என்று பாடி முடித்தார் புலவர். பாட்டின் நுட்பம் பழைய நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டதாத லால் எல்லோருக்கும் விளங்கவில்லை. ஆயினும், அவ் வரசனுக்கு விளங்கிவிட்டது. அப்படியே வெட்கிப் போனான்; தன் சிறுமையை எண்ணி வருந்திப் புலவ ரிடம் மன்னிப்புக் கேட்டான்; பின்பு தன்னூர் திரும்பி நல்ல முறையிலே கற்றவர்களிடம் ஒழுகினான்.

படிப்பது எதற்காக என்ற வினாவுக்கு மிழலைப் புலவர் கூறுகின்ற விடை நாம் கவனித்தற்குரியது. கல்வியானது மக்களுக்கு ஒழுக்கத்தைப் புகட்ட வேண்டும் என்பது அவர் கூற்று.

நடக்கப் படிக்கின்ற நாட்டார்
மிழலை நராதிபரே

என்பது இந்த முதன்மையான லட்சியத்தை நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

## இயற்கையோடியைந்த இன்பம்

கடவுளைப்பற்றி நினைக்கிறோமா? என்ன நினைக்கி றோம்? அந்த நினைவு நம் வாழ்க்கையோடு ஒட்டி யிருக்கிறதா?

இந்தக் கேள்விகளை ஆராய்ந்து எளிதிலே முடிவு சொல்வது அருமை. ஆனாலும் ஒரு வகையில், அனுப வத்தைக்கொண்டு இவற்றை விளக்கமுடியும்.

ஆதி காலத்திலே, மக்களில் அறிவிற் சிறந்தவரா யிருந்த பெரியோர், தங்கள் உள்ளத்தில் தோன்றிய உயர்ந்த கருத்துக்களைத் தொகுத்து வைத்தார்கள். இவற்றையே நாம் வேதங்கள் என்று சொல்லுகிறோம். இந்த வேதங்கள் கடவுளை ஆராய்ந்து காண வேண்டு மென்று தேடினவாம். (இதுவும் உள்ளத்தில் தோன் றிய ஒரு கற்பனை தான்.) எவ்வளவு ஓங்கித்தேடினாலும், எவ்வளவு ஆழ்ந்து பார்த்தாலும், எவ்வளவு அகன்று பரந்து நோக்கினாலும், இறைவனுடைய விராட் சொரு பத்தின் எல்லையைக் காண முடியவில்லை. இவ்வளவு பெரிய இறுதியற்ற பரம்பொருளாயுள்ள இறைவன், நுட்பமானவை யாவற்றினும் நுட்பமாயுமிருக்கிறான். இந்தப் பெருமைக்கும் நுட்பத்துக்கும் இறுதி காண

முடியாத நிலையிலே, வேதங்கள் ‘ஐயா!’ என்று மட்டும் கதறி அயர்ந்துபோயினவாம். இந்த உண்மையை,

—வேதங்கள்
**ஐயா! என, ஓங்கி,**
**ஆழ்ந்(து), அகன்ற நுண்ணியனே!**

என்று வெகு எளிதில் மாணிக்கவாசகர் தம் அனுபவ வாயிலாக வெளியிட்டார். இதன் விரிவை அனுபவம் வந்த பெரியோர்களிடம் கேட்டு ஆனந்திக்கலாம்.

ஆனால், இதைக் கேட்டு ஆனந்திப்பது வேறு, வாழ்க்கையிலே உணர்வது வேறு. வாழ்க்கை யென்றால் சாதாரணமாக நாட்டுப்புறத்து வாழ்க்கையை நாம் நினைப்பதில்லை; பட்டண வாழ்க்கைதான் நினைவுக்கு வருகிறது. பட்டண வாழ்க்கையிலே சற்றேனும் அமைதியுண்டா? மருந்துக்கும் கிடையாது. வாழ்க்கை முழுதுமே ஒரு போராட்டமாகி விடுகிறது. இதில் அமைதிக்கு இடமேது?

நகர வாழ்க்கையில் ஈடுபட்ட ஒருவன் சற்றுநேரம் அமைதியாயிருக்க விரும்புகிறானென்றே வைத்துக்கொள்வோம். அமைதி என்பது கடையில் வாங்கக்கூடிய சரக்கா? இல்லையே! அமைதியாக வெளியே போய் உலாவிவிட்டுத் திரும்பலாம் என்றெண்ணிப் போகிறான். அமைதியாகப் போக முடிகிறதா? போனாலும் தன்னை மறந்து தலைவனை நினைக்க முடிகிறதா?

குறுகலான தெரு. இருபுறமும் நெருங்கி உயர்ந்த வீடுகள். மனிதன் கட்டிய வீடுகள், மனிதன் வாழ்கிற வீடுகள். காலெடுத்து வைக்குந்தோறும் இவனுக்கு என்ன நினைவு வருகிறது? காலின் கீழே, கருங்கல் போட்டு, மேலே தார் ஊற்றின சாலை. கடவுளால்

படைக்கப்பட்ட பூமியல்ல இது ; அதை மனிதன் மூடி விட்டான். மனிதன் போட்ட கருங்கல்தான் இவன் காலில் உறுத்துகிறது ; மனிதன் போட்ட தார்ச்சாலே தான் இவன் காலில் சுடுகிறது.

சரி, இவை போகட்டும். இருபுறமும் குப்பைத் தொட்டிகள் ; இவற்றிலிருந்து வீசும் நாற்றத்தையும் பறந்து வரும் ஈக்களையும் மறந்துவிடுவோம். எதிரிலோ, தெருவில் பாதி அடைப்பு ; சிவப்புக் கொடி ; "சாக்கடை வேலே நடக்கிறது. கவனமாய்ப் போகவும்" என்ற அறிக்கை காணப்படுகிறது. நகர வாழ்க்கையின் பிரதாபமெல்லாம் சாக்கடையின் பிரதாபமாய்த்தான் இருக்கிறது! சற்று அப்பால் போகிருன். 'மேலேயாவது நிமிர்ந்து வானத்தைப் பார்ப்போம் ; மனிதன் செயலே மறக்கலாம்' என்றெண்ணுகிருன். ஆனல் மேலே என்ன காண்கிருன் ? மின்சாரக் கம்பிகள். இவைகளே அவன் கண்களில் உறுத்துகின்றன.

எங்குப் பார்த்தாலும், கீழே, மேலே, சுற்றிலும், எங்கும், மனிதனே சர்வ வியாபியாய்த் தோன்றுகிருன். எல்லாம் மனிதன் செயல், மனிதன் செயல், மனிதன் செயல்.

குறுகிய தெருவை விட்டு, அகன்ற பெரிய சாலேகளில் போகிருன். அங்கும் இவன் காண்பது, மனிதனுடைய அகலந்தான். ('யாரறிவார் அந்த அகலமும் நீளமும்' என்ற திருமூலர் வாக்கு மனிதனுக்கே பொருந்தி விடும் போலிருக்கிறதே!) இருபுறமும் போகிற மோட்டார்களின் அலறல் காதைத் தொளேக்கிறது. நடைபாதைகளும், அவற்றில் நடைபெறும் மராமத்துகளும், சொல்ல வேண்டியதில்லே. முன்னமேயுள்ள சொற்ப மனஅமைதியும், இங்கே நீங்கிவிடுகிறது.

கடவுளைப்பற்றி நினைக்க இங்கே இடமேது, மனிதனே சர்வ சக்திமானுய்க் காட்சியளிக்கும்போது ?

ஆனல், இவ்வளவும் உண்மைத் தோற்றமா ? இல்லை, போலித் தோற்றந்தான். சென்ற சித்திரை மாதத்திலே, கிராமத்தில் போய் இரண்டு மாதம் வாசம் செய்தபோது, நகரவாழ்க்கையின் போலித் தன்மையைக் கண்டேன். பட்டண முழுவதுமே யுத்த பீதியினல் வெளியே ஓடிப்போனபோது, நான் மட்டும் பட்டணத்தில் இருக்கமுடியுமா ? நான், எனது கிராமத்துக்குக் குடி போய்விட்டேன். கொள்ளிடக் கரையிலே, தென்னங்கீற்ருல் வேய்ந்த சிறு குடிசையொன்று போட்டுக்கொண்டு அதில் வசித்தேன்.

குடிசைக் கெதிரில், கண்ணுக்கெட்டிய தூரம் வரையில், அறுவடையான வயல்கள். இரண்டு பக்கங்களிலும் கடலைக் கொல்லையும், கத்தரிக் கொல்லையுமிருந்தன. பின்னலே, தோட்டத்தை யடுத்து ராஜன் வாய்க்கால் ஓடிற்று ; ராணிபோல, சமுத்திர ராஜனைத் தேடி. மாலையிலே, இந்த ஆற்றங்கரைக்குப் போகும் போதெல்லாம், சற்றுநேரம் என்னை மறந்து நின்று விடுவேன். அந்த நிலை இப்போதும் ஞாபகம் வருகிறது. ஓடுகிற ராஜன் வாய்க்கால் தண்ணீரைப் பார்க்கப் பார்க்க, இறைவனுடைய திருவிளையாடலை நினையாமலிருக்க முடியாது. சித்திரை மாதக் கோடையிலே, சிலுசிலுவென்று ஆனந்தமாக இங்கே நீரோடுகிறது ! இது மனிதன் செயலா ? 'பம்பு' வைத்து மனிதன் இறைக்கிருனு ? இது இறைவன் செயல். எங்கேயோ, எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலே, அவன் பெய்விக்கிற மழை, எத்தனையோ ஆயிரக் கணக்கான

வருஷங்களாக, இங்கே ஓடி வருகிறது! அவனுடைய கருணைதான் என்ன!

ராஜன் வாய்க்காலைக் கடந்தால், கொள்ளிடக் கரை. கோடைகாலமானபடியால், தண்ணீர் கொள்ளிடத்தின் மத்தியிலே, இடுப்பளவுதான் ஓடுகிறது. நீரோட்டத்துக்கு இருபுறமும் பரந்த மணல்வெளி. அரை மைல் தூரம் இக்கரையிலும் அக்கரையிலும் ஆற்றிலே பரந்திருக்கும் மணலைப் பார்த்தால், என் கண்ணுக்குக் கடற்கரை போலவே தோற்றுகிறது. தூவெள்ளை மணல். சென்னையிலுள்ள 'மரீனு பீச்' உலகத்திலே மிகச்சிறந்த கடற்கரைகளில் ஒன்றென்று சொல்வார்கள். அக்கடற்கரைகூட, கொள்ளிடத்தின் மணற்பரப்புக்குத் தாழ்ந்ததுதான். கடற்கரையிலுள்ள குப்பைகளும் அசுத்தங்களும் (இவை என்னவென்று சொல்லவேண்டாம்!) இங்கே இல்லை. வீண் இரைச்சலும் மனிதர் கூட்டமும் கிடையா. "நில்லும் எனக்கினி நேரமில்லை - இன்னும், நீண்டவழி போகவேண்டும் ஐயா!" என்று நதியானது காதோடு காதாய் மெல்லச் சொல்வதைக் கேட்கவும் முடிகிறது.

பகலிலாகட்டும், இரவிலாகட்டும் என் குடிசையைச் சுற்றி எவ்விதச் சந்தடியுமில்லை. ஆங்காங்கே, வேலியோரத்திலும், ஆற்றங்கரையிலும், வரப்பிலும், இரண்டொரு மாடுகளும் கன்றுகளும் ஆடுகளும் மேய்கின்றன. உழவர் சிலர் புழுதி உழுகிருர்கள்; சிலர் கடலைக்குக் களை வெட்டுகிருர்கள். தூரத்திலே ஒரு களத்தில் போரடி நடக்கிறது. இவை தவிர, நாற்புறமும், எவ்வளவு தூரம் பார்த்தாலும், இயற்கைக்கு மாறுபட்ட எந்தத் தோற்றத்தையும் காணமுடியாது. பெட்ரோல் நாற்றமும்,

கரிவாயு நாற்றமும், விலை கொடுத்தாலும் வரமாட்டா. மோட்டார் சத்தம் கிடையவே கிடையாது. சட்டை போட்ட மனிதனை இங்கில்லையே!

இரா நேரத்தில், நிலவெறிக்கும்போது, தூரத் திலே பார்த்தால், இயற்கைத் தோற்றமாகிய இந்தப் படத்துக்குச் சட்டம் போட்டதுபோல் தரையிலுள்ள மரங்கள் இருண்டு சூழ்ந்திருப்பது தெரியும். வானம் வளைந்து வந்து, பூமியில் வளர்ந்த அந்த மரங்களின் உச்சியிலுள்ள இளந்தளிர்களையும் விரிந்த நறுமலர்களை யும் முத்தமிட்டே தழுவி முகிழ்த்தலும் காணலாம்.

பிரபஞ்சம் எல்லையற்றது என்ற உணர்ச்சியை இயற்கையோடியைந்த இப்படிப்பட்டதொரு நாட்டுப் புற இன்ப வாழ்க்கையிலேதான் காணமுடிகிறது: எல்லையற்ற பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து இயக்குகிற பரம்பொருளின் நினைவும் இங்கேதான் நமக்கு உண்டாக முடியும். அப்பொருளின் பெருமையையும் நுண்மையை யும் இங்கே உணருகிறோம். நமது வாழ்க்கை இயற்கை யோடு ஒன்றியிருப்பதனாலே இறைவனைக் குறித்த நினைவும் நம் வாழ்க்கையோடு ஒன்றிநிற்கிறது.

— வேதங்கள்

**ஐயா! என ஓங்கி**
**ஆழ்ந்(து) அகன்ற நுண்ணியனே!**

என்று நாமும் மாணிக்கவாசகரோடு சேர்ந்து இதய பூர்வமாகச் சொல்லி வணங்குவதற்குரிய பக்குவத்தை யும் இங்கேதான் பெறுகிறோம்.

இந்நூலாசிரியரின்
ஏனைய நூல்கள்

## காற்றிலே மிதந்த கவிதை

வாய் மொழி இலக்கியம் என்று கூறப்படும் நாடோடிப் பாடல்களைப் பற்றிய கட்டுரைத் தொகுதி. ஒவ்வொரு கட்டுரையும் கவிச் சுவை மிக்க இன்பமான நடையில் அமைந்திருக்கிறது. விலை ரூ. 1

## யான் பெற்ற இன்பம்

இலக்கியம் ஒரு கலை. கவிஞன், தான் உணர்ந்து அனுபவித்த உண்மைகளைச் சொல்லிலே அமைக்கிறான்; இவை இலக்கியமாகின்றன. இலக்கியத்தைக் கவிஞன் உள்ளத்தோடு ஒன்றி அனுபவித்தால் ஆனந்தமேற்படுகிறது; உள்ளம் தூய்மை பெறுகிறது, வாழ்க்கையும் திருந்துகிறது.

அன்பர் மு. அருணாசலம், இலக்கியத்தைக் கவிஞன் கண்கொண்டு பார்த்து ஆனந்திப்பவர். இலக்கியத்திலே தாம் கண்ட இன்பத்தை இக்கட்டுரைகளிலே கூறுகிறார்.

விலை ரூ. 1-8-0

Printed by Shakti Press Ltd., (Shanti Press) Madras